பண்டித

# மதனமோகன மாளவியா




எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்






பதிப்பாளர்:
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்
53-56, பவழக்காரத் தெரு :: சென்னை 1

 1952 [ரூ. 1-0-0

# முகவுரை

பெரியாரின் வாழ்க்கை வரலாறு, வெள்ளித் திரையிலே வியன் நடிகரின் சொல்லையும் செயலையும் கண்டு களிப்பதினும் மிக்க பயன் ஊட்ட வல்லது; நமது சிந்தையும் செயலும் ஆன்மாவும் சிறப்படையவும் வழிகாட்டும்.

அரசியலிலும் சமயத்துறையிலும் மாறுபட்டவர்கள் கூட நம் பண்டிதரிடம் பகைமையோ வெறுப்போ கொண்டது இல்லை. எல்லாருக்கும் இனியராகவே அவர் வாழ்ந்து வந்தார்.

அன்று பகீரதன் தெய்வலோகத்திலிருந்து கங்கையை இங்கே கொணர்ந்தான் என்றால், நம் மாளவியாவோ, காசி இந்து பல்கலைக் கழகத்தைப் பாரோர் மெச்சும் வண்ணம் இங்கே நிறுவினர். அவரது புகழ்ப் பெருமைக்கு அக்கழகம் ஒன்றே போதும்.

காந்திமகான் முதல் சம்ஸ்தான மன்னர் வரையில் அனைவரும் அவரைக் கண்டால், எழுந்து நின்று அஞ்சலி செய்வர். இவ்வளவுக்கும் அவரது ஒழுக்கமே காரணம். ஒழுக்கத்தை உயிரினும் உயர்வுடையதாகவே அவர் போற்றி வந்தார்.

அவரது வாழ்க்கை நம்மவருக்கு விழுப்பமும் வியப்பும் ஊட்டாநிற்கும்.

M. S. சுப்பிரமணிய ஐயர்
ஆசிரியர்.

# பொருளடக்கம்




## பண்டித

# மதனமோகன மாளவியா

---:o:---

## 1. தோற்றுவாய்

'அந்தணர் என்போர் அறவோர்,மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்,' என்பது திருவள்ளுவரின் வாக்கு. 'அந்தணர் என்று சொல்லப்படுவோர் அருளாளர்; ஏனெனில், அவர்கள் எல்லா உயிர்களிடத்தும் அதிக அன்பும் அருளும் காட்டி நடந்து வருவார்கள்,' என்பதே இத்திருக்குறளின் கருத்தாம்.

இந்த வாக்கினுக்கு ஓர் இலக்காய்த் துலங்கி வந்தார் பண்டித மதன மோகன மாளவியா என்பவர். திருமிகு காந்தியை மகாத்துமா என்பதுபோல, பண்டித மாளவியாவைத் தருமாத்துமா என்பர் பலரும். வாரணாசி நகரிலுள்ள 'காசிப் பல்கலைக்கழகம்'என்பது அவரது அரிய முயற்சியின் பலனாய் எழுந்ததாம்.

அப்பல்கலைக் கழகம் பல மைல் பரப்பு உள்ளது; ஒரு பெரிய நகரம் போலவே தோன்றும். மாளவியா ஒரு நாள் தமது மோட்டாரில் அதனைச் சுற்றி வந்தார். வழியிலே பாற்பசு ஒன்று அசை போட்டுக்கொண்டு, குறுக்கே படுத்திருந்தது.

வண்டிக்காரன் எவ்வளவோ சத்தம் செய்தும், அப்பசு அசையவில்லை. உடனே அவன் சினம்

கொண்டு, அதனை அடித்துத் துரத்த வண்டியை விட்டுக் கீழே இறங்க முயன்றான்; தன் கையிலே இருப்புக் கம்பி ஒன்றையும் எடுத்துக்கொண்டான். அதைப் பார்த்ததும், பண்டிதர் பரிவு மிகுந்து, "அப்பனே, நமக்கெல்லாம் ஆவினம் தெய்வம் போலும். எனவே, அதன்மீது கோபம் கொள்ளாதே; 'கோ மாதாவே, வழி விலகு,' என்று வேண்டிக்கொள்," என்று அன்பு ததும்ப விளம்பினர். வண்டிக்காரனும் அவ்வாறே கையெடுத்துக் கும்பிட்டு வேண்டிக்கொண்டான். அக்கணமே பசுவும் பரிவுடன் எழுந்து வழி விட்டது.

பண்டிதரின் செல்வப் புதல்வி ஒருத்தி காச நோயால் மாண்டு போனாள். அப்போது, ஈசுவர சரணர் என்பார் அவரிடம் துக்கம் விசாரிக்க வந்தார். "அன்பீர், நமது தேசத்தில் ஆயிரக் கணக்கான பெண்டிர் அக்கொடுநோய்க்கு இரையாகின்றனரே! அவர்களுக்கெல்லாம் தக்க மருத்துவ வசதி உளதா? நல்ல உணவேனும் உண்டா? என் ஒரு மகளுக்காக நான் புலம்பினால், அவர்களின் பெற்றோர் பல வகையிலும் துடிப்பரே! நம் தேசமெங்கும் அவர்களுக்கு நல்ல சுகவாசத் தலம் அமைத்தல் வேண்டும்," என்று பண்டிதர் கசிந்து கூறிக் கண்ணீர் மல்கினர்.

நமது சென்னை நகரிலே முன்னம் இருந்த பாரிஷ்டர்களுள் ஒருவர், திரு இ. எல். ஐயர். ஒத்துழையா இயக்கம் ஒடுங்கிநின்ற காலத்திலே, வட இந்தியாவில் ஏழைத் தொழிலாளருக்குத் தலைவராய் இருந்து, அந்த ஐயர் ஊழியம் புரிந்துவந்தார். ஒரு சமயம், முதலாளிகளின் மிடுக்கினைக் கண்டு அத்தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ய நேர்ந்

தது. அப்போது, ஐயர் நம் பண்டிதரை அடைந்து, டில்லிச் சட்டசபையில் அதைப்பற்றி முறையிட விரும்பினார்.

பண்டிதர் அஃது அறிந்து, "நல்லது! ஏழைத் தொழிலாளர் பசியினால் வாடி வதங்குவரே! முதலில் அப்பசி நோயைப் போக்க நாம் வகை செய்வோம்," என்று கூறினார்; உடனே ஐயரை உடன் அழைத்துக்கொண்டு, அங்குள்ள சீமான்களைக் கண்டு, ஏராளமாக நிதி தேடிக் கொடுத்து, "பசிநோயைத் தீர்த்துவிட்டு வாருங்கள். பிறகு சட்டசபையில் முறையிட முயல்வோம்," என்றுரைத்து விடை கொடுத்தார்.

ஒப்பு உயர்வு இல்லாத அந்தணர், பண்டித மாளவியா. தூய மனம், சீரிய தியாகம், சிறந்த சேவை, பரந்த அருள் முதலிய அருங்குணங்கள் அவரிடம் குடி கொண்டிருந்தன. கல்வியறிவு, சமய ஞானம், அரசியல் ஆராய்ச்சி, சாஸ்திரத் தேர்ச்சி, தொழில் முயற்சி இவற்றில் அவர் தலைசிறந்தவர். அன்னவரது வாழ்க்கைச் சரிதம் இது.

## 2. நாட்டுச் சிறப்பு

முன்னம் நமது பாரத பூமியை ஐம்பத்தாறு தேசங்களாக வகுத்திருந்தனர். அவற்றுள் ஒன்று பெருமை மிகுந்த மாளவ தேசம். பல்லாண்டு பல்லாண்டாக நமது தேச சரித்திரம், புராண இதிகாசங்கள், காவியங்கள், கதைகள், நாடகங்கள் இவற்றில் இணையிலாச் சிறப்பு வாய்ந்தது அம் மாளவம்.

விக்கிரம சகாத்தத்தை நிறுவிச் சென்ற விக்கிரமாதித்தன் என்னும் வேந்தர் பெருமான், அம் மாளவத்திலேதான் பிறந்து வளர்ந்து, பேராண்மை காட்டிப் பெரும்புகழ் எய்தினன். அச்சீரிய வேந்தன் செங்கோல் செலுத்திய நகரம் உச்சயினி என்பதாம். அந்நகரிலே மகாகாலர் ஆலயம் ஒன்று உண்டு. அதனை மகாகாளி ஆலயம் என்றும் வழங்குவர்.

பன்னீராண்டுக்கு ஒருமுறை அந்நகரிலே மகாகாலர் திருவிழா நடக்கும். அச்சமயம் அங்கே இலட்சக் கணக்கில் மக்கள் கூடி, அம்மூர்த்தியை ஏத்தித் தொழுவர். அம்மூர்த்தியைச் சரண் அடைந்தால், அரியவரம் அனைத்தும் பெறலாம். காளிதாஸர் என்னும் மகா கவிஞர் அக்காளியின் அருள் வாய்க்கப் பெற்றே வரகவி ஆயினர் என்பர் பெரியோர்.

மாளவ தேச மக்களை மாளவர் என்று வழங்குவர். அந்த நாளிலே பாரத மக்களுட்பெருவலி படைத்தவர் மாளவரே. கிரேக்க வேந்தனான மகா அலெக்ஸாந்தர் தன் படையுடன் இந்நாட்டிற் புகுந்த பொழுது, அவ்வேந்தனை எதிர்த்துநிற்க முன்வந்தவர்களுள் மாளவரையே முதன்மையாக மொழிய வேண்டும். அம்மாளவரின் அருந்துணை கொண்டே சிதியர், சாகர் என்னும் அன்னியரை முனை முகத்தில் அவ்விக்கிரமன் முறியடித்தான்.

அந்த முதலாம் விக்கிரமாதித்தன் காலம் முதல், சமீப காலம் வரையில் அத்தேசத்திலே கலைமகள் களிநடம் புரிந்து வந்தாள். சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாய் ஆங்கிருந்து அரசு செலுத்திய இந்து வேந்தர் அனைவரும் கல்வியில் வல்லாரை ஆதரித்து வந்தனர். அங்கே பாரெங்கும்

புகழ் பரப்பிய பல்கலைக் கழகம் ஒன்று நெடுங் காலம் நிலைத்திருந்தது. வானநூல் ஆராய்ச்சிச் சாலை ஒன்றும் அங்கே பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையில் பாங்குடன் துலங்கியது.

அம்முதலாம் விக்கிரமாதித்தன், கலைகள் பலவற்றையும் வளர்த்து, வேத மார்க்கத்தை நிலை நிறுத்தி, அருமையும் பெருமையும் அடைந்தான்; தவிர, வடவிந்தியாவிலே கீழ்க்கோடியிலிருந்து மேல் கோடி வரையில் செல்லும் ராஜ பாதை ஒன்றை அமைத்து வைத்தான். அதனால், பாரத பூமியில் விளையும் பொருள்களெல்லாம் அங்கே வந்து குவிய, அந்நகரம் இந்நாட்டின் பண்டக சாலையாகவே முன்னாளில் துலங்கி வந்தது.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் அம்மாளவத்தை முகம்மதியர் கைப்பற்றிக்கொண்டனர். ஆயினும், அம்மன்னருட்பலரும் அருங்கலை விநோதராய் விளங்கி, கல்வியாளருக்கு ஊன்றுகோல் போல உதவி வந்தனர். முகம்மதிய ஆட்சி அங்கே தலையெடுத்த போதிலும், இந்துக்களின் கலைவளர்ச்சிக்கும் சமய ஆராய்ச்சிக்கும் தங்குதடை நேரவில்லை. மொகலாயரின் ஆட்சிக் காலத்திலே அந்நிலைமை மாறிவிட்டது.

உச்சயினி நகரில் ஒளரங்கசீபு என்பான், அரசில் ஆசை மிகுந்து, தன் தமையன் தாரா என்பானுடன் கடும்போர் புரிந்தான். அந்நகருக்கு அருகேதான் தாரா நகரம் என்பது ஆதியில் தோன்றியது. அத்தாரா நகரிலிருந்தே முதல் போஜ மகாராஜன் ஆட்சி செலுத்தி வந்தான். போஜன் ஆண்டு வந்த பிரதேசமே இப்போது போஜபாலம் அல்லது போபால் சம்ஸ்தானம் என வழங்கி வருகின்றது.

மொகலாயரின் ஆட்சி முளைத்த காலத்திலே அம்மாளவத்தில் கொதிப்பும் கொந்தளிப்பும் தலையெடுத்தன. ஆதலின், ஆங்கிருந்த வேதிய குலத்தாருட்பலரும் வேற்றிடம் போய்க் குடியேற நேர்ந்தது. அவ்விதம் அவர்கள் குடியேறிய இடம் கங்கை நதிக் கரையிலுள்ள பிரயாகை எனப்படும். மாளவ தேசத்தினின்று வந்தமையால், அவர்களுக்கு மாளவியா என்னும் காரணப் பெயர் ஏற்பட்டது.

பண்டித மதனமோகன மாளவியாவின் முன்னவருள் ஒருவர் அலகபாது எனப்படும் பிரயாகை நகரிற் குடியேறினர்.

## 3. முன்னோர் பெருமை

ஆதியிலே, வடவிந்தியாவில் ஸம்ஸ்கிருத மொழியே பிரபலமாய் இருந்தது. வடநாட்டிலே வழங்கி வந்தமையால், தமிழர் அதனை வடமொழி என்பர். அம்மொழியே வேறு பல மொழிகளுக்குத் தாயகம் ஆகும். அம்மொழியிலேதான் வேதம், உபநிஷதம், காவியம், நாடகம் முதலியன எழுந்தன. அம்மொழியே தேவபாஷையாயும் இருந்தது.

இன்று காணக் கிடைக்காத அற்புத நூல்கள் பல, அவ்வடமொழியில் அன்று இருந்தன. இன்றும் நாநா விதமான நூல்கள் அம்மொழியில் உண்டு. அறிவுக் களஞ்சியம் போன்றது அம்மொழி. பண்டித மாளவியாவின் முன்னோர் வாழையடி வாழையாய் அம்மொழியிலே வல்லவராயிருந்தனர். அவர்கள் பெரிய கல்விமான்கள்; கவிஞர்களுமாவார்கள்.

மாளவ தேசத்தைத் துறந்து கங்கை நதிக் கரையில் குடியேறிய பொழுது, அங்கே இந்தி மொழி பெரிதும் வழங்கி வந்தது. அதனையும் அவர்கள் கற்றுத் தேர்ந்து, சீமான்களிடம் சிறப்பு எய்தினார்கள்.

தருமாத்துமா மாளவியாவின் பாட்டனார், பிரேமதர மாளவியா எனப்படுவார். வேதியருக்குரிய ஒழுக்கத்தில் அவர் மிக உயர்ந்தவர்; தெய்வ பத்தியில் நனி சிறந்தவர்; 'ஒழுக்கம் விழுப்பம் தரும்,' அல்லவா? ஆதலின், மேன்மையெல்லாம் அவரை வந்து அடைந்தன. அறிஞரும் அரசரும் அவரைப் போற்றி வந்தனர்.

பிரேமதரரின் புதல்வர் விரஜநாதர் எனப்படு வார். அவரும் தம் தந்தையாரைப் போலவே வட மொழி வாணராய் விளங்கினார். கல்விக் களஞ்சியம் என அவரை எல்லாரும் கொண்டாடினர். புராண இதிகாசங்களில் அவருக்கு இருந்த ஆராய்ச்சியும் அறிவும் எட்டுத் திக்கிலும் பரவின. அதனால், பலரும் அவரை அடைந்து, புராண இதிகாசங் களின் நுணுக்கங்களையெல்லாம் நன்கு உணர்வது வழக்கம்.

ஸ்ரீமத் பாகவதத்தில் அவர் இணையிலாப் புலமை வாய்ந்தவர். தினந்தோறும் அவர் பாக வதப் பிரசங்கம் செய்வார். ஆயிரக் கணக்கில் மக்கள் வந்து, செவி மடுத்து, இன்பம் எய்துவார் கள். ஏழை, பணக்காரர் ஆகிய எவரும் அவரை அடைந்து, எளிதில் நல்லறிவும் எய்துதல் உண்டு.

வற்றாத கல்விச்செல்வம் அவரிடம் நிரம்பி நின்றும் என்ன பயன்? பொருட்செல்வம் அவ ரிடம் பூஜ்யமாய் இருந்தது. பேரரசர் முதலி யோர்க்கு அவர் ஞான குருவாய் இருந்தும், அன்

னரிடம் காசு பணத்தை அவர் எதிர்பார்க்கவில்லை. 'கல்வியை அனைவர்க்கும் இலவசமாக வழங்க வேண்டுமே அல்லாமல், காசுக்கு விற்கக்கூடாது,' என்பதே அவரது நோன்பு ஆயிற்று. வலிய வந்து சிற்சிலர் பொருளுதவி புரியினும், அதுகண்டு அவர் மனம் மகிழார்; காசு பணம் வந்து கருத்தைக் கெடுத்துவிடக்கூடாது என்னும் கவலையே கொண்டிருந்தார்.

அவர் வடமொழியில் இயற்றியுள்ள அரிய நூல்கள் ஒரு நூற்றுக்கு மேலிருக்கும். எல்லாம் தெய்வப் பற்றையே பெரிதும் புகட்டும்; சமய ஞானத்தையே நன்கு வளர்க்கும். அந்நூல்களிற் சொற்செறிவும் பொருள் ஆழமும் கண்டு பாராட்டாதார் இலர். அத்தகைய நூல்களை அச்சு வாகனத்தில் ஏற்றவும், அவர் பிறரது பொருளுதவியை நாடவில்லை.

அருட்செல்வமும் கல்விச் செல்வமும் அவரிடம் குறைவற நின்றமை போலவே, மக்கட்செல்வமும் பொருந்தியிருந்தது. பிள்ளைகளும் பெண்களுமாகப் பதினறு பேருக்கு மேற்பட்ட மக்கள் இருந்தார்கள். அப்பெருங்குடும்பத்தைக் காப்பாற்ற அவர் மிகவும் வருந்த நேர்ந்தது.

அவரை ஞான குருவாய் அடைந்த காசி மகாராஜா், தர்பங்கா மகாராஜா் ஆகிய இருவரும் அந்நிலையை உணர்ந்து, எவரும் அறியா வண்ணம் அவரது பெரிய குடும்பத்தைப் பாதுகாத்து வந்தனர். அதனல், ஊணுக்கும் உடைக்கும் முட்டின்றி, அம்மக்கள் வாழ்ந்து வரலானார்கள். அம்மக்களுள் மூன்றும் மைந்தராகப் பண்டித மதன மோகன மாளவியா பிறந்தார்.

# 4. பள்ளிப் படிப்பு

பண்டித மதன மோகன மாளவியா அலகபாது நகரிலே 1861-ஆம் ஆண்டு தோன்றினர். தோன்றியதும், சோதிடர் வந்து நாளும் கோளும் ஆராய்ந்து, "இப்பாலன் பாரெங்கும் புகழ் பரப்புவான்," என்று கூறி, ஆசியும் உரைத்தனர். தாய் தந்தையர் அது கேட்டு, அகமிக மகிழ்ந்து, அக்குழந்தையை அருமையாக வளர்த்து வந்தனர்.

பாலும் சாதமும் பரிந்து ஊட்டும் பொழுது, தாயார் தம் குல முன்னோர்களின் மகிமையை மைந்தருக்கு எடுத்துரைப்பார். மைந்தரை மடியில் வைத்துப் பாராட்டும்போது தந்தையாரும், பாரத பாகவதக் கதைகளைக் கனிவுடன் கூறி வருவர். குழந்தையும் அவற்றையெல்லாம் காது கொடுத்துக் கேட்டு, மிக்க களிப்பு அடையும்.

மதன மோகனர்க்கு ஐந்து வயது ஆனதும், வேத விதிப்படி பெற்றோர் வித்தியாரம்பம் செய்வித்தனர். அக்குலத்தாரின் தாய்மொழி ஸம்ஸ்கிருதமே. ஆதலின், 'அம்மொழியில் பையன் தேர்ச்சி பெற வேண்டும்!' என்று தந்தையார் விரஜநாதர் கருதி, சம்ஸ்கிருத பாடசாலையில் சேர்த்தார். முதலாவதாக, தரும ஞானோபதேச பாடசாலையிலும், அப்பால் வித்தியா தரும வர்த்தினி சபாவிலும் இளம்பண்டிதர் படித்து வந்தார்.

அப்போது ஆசிரியரும் பிறரும் இளம்பண்டிதரின் மதிநலம் கண்டு வியந்தனர்; 'பிற்காலத்திலே பெரிய மேதையாய்த் துலங்குவார்!' என்றும் வியந்து பேசினர்; அறிவு மிகுந்த மக்கட்பேற்றை அடைந்த விரஜநாதரையும் வெகுவாகப் பாராட்டி

னர். ஊராரும் உற்ருரும் அப்படியே புகழ்ந்து நின்றனர்.

அந்நாளில் ஆங்கிலப் படிப்பிற்கு இருந்த பெருமையை விரஜநாதர் அறிந்து, தம் மைந்தரை ஆங்கிலப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினுர். ஆண்டுதோறும் மேல் வகுப்பிற்குத் தவருமல் மாறி, முடிவில் கலாசாலையிலும் இளம்பண்டிதர் சேரலானுர். அங்கும் ஆசிரியர்கள் அவரது கல்வித் திறனையும், குண நலனையும் கண்டு மகிழ்ந்தார்கள்.

இளமை முதற்கொண்டே இளம்பண்டிதரிடம் இனிய நடைமுறைகள் உதித்தோங்கி வந்தன. வைகறையில் அவர் துயில் எழுவார்; உடனே ஆண்டவனை மனத்தில் இருத்தி, வாயார வாழ்த்து வார்; நல்ல நீராடித் தூய உடை உடுப்பார்; யாவரிட மும் அன்பு கனியப் பேசுவார்; பெரியாரைக் கண்டால் அடங்கி நின்று, மரியாதை செய்வார். அவை எல்லாம் பிறவிக் குணங்களாகவே அவரி டம் ஒளி வீசின.

பெருமதி படைத்த இளம்பண்டிதர் கலாசாலை யிலும் பெருமை எய்தி, நல்ல மாணவர் என்று பெயர் வாங்கினுர். மற்ற மாணவர்கள் அவரைக் கண்டதும் பத்தி விசுவாசம் காட்டினுர்கள். நகர மாந்தரும் அவரது நடையும் உடையும் கண்டு, நயந்து பேசினர். கலாசாலைத் தலைவரான ஹாரிஸன் என்பாருக்கு இளம்பண்டிதரிடம் ஈடிலா ஆர்வம் உண்டு.

எல்லாருக்கும் இனியவராய் இளம்பண்டிதர் நடந்து வந்து, ஆங்கிலப் படிப்பில் மூழ்கி இருந்த போதும், வடமொழிப் பயிற்சியை அவர் கைவிட வில்லை. தினந்தினம காலையிலும் மாலையிலும் வட

மொழிப் பண்டிதரை அடைந்து, காவியமும் நாடகமும் பயின்று, உள்ளம் பூரித்து வந்தார்.

1874-ஆம் ஆண்டில் அவர் பி. ஏ. பட்டம் பெற்றார். மேலும் படிக்க வேண்டும் என்றே இளம் பண்டிதர் பேராவல் கொண்டார். ஆயினும், குடும்பத்தின் செல்வநிலை அதற்கு இடையூறாய் இருந்தது.

அவர் குடும்பம் மிகப் பெரியது. அனைவரையும் ஆலம் விழுது போல இளம்பண்டிதர் தாங்குவார் என்று எல்லாரும் எதிர் பார்த்து நின்றனர். அந்நிலையிலே 'எந்தத் தொழிலில் இறங்கலாம்!' என்று அவர் மிகவும் சிந்தனை செய்தார்.

## 5. ஆசிரியப் பணி

கற்றதைப் பிறருக்குக் கற்பிக்கவும், மேலும் மேலும் கற்கவும் வசதியான ஆசிரியத் தொழிலே சாலச் சிறந்ததென இளம்பண்டிதர் எண்ணினர். அவர் முன்னம் படித்து வந்த பாடசாலை அதிகாரிகள் அது சமயம் ஓர் ஆசிரியரை நாடினார்கள். பண்டிதர் வருவாரா என்று அவர்கள் எதிர் பார்த்துநின்ற சமயம், பண்டிதரும் அவர்களை அடைந்தார்; ஆசிரியப் பணியில் அமர்ந்தார்; இளஞ்சிறார்க்கு இனிய போதம் புகட்டுவதில் ஓர் இன்பம் கண்டார்; அன்னவரை நன்மக்களாக்குவதில் மிக்க ஆவல் பூண்டார்; அதுவே உடலெடுத்த தன் பயன் என்று உறுதி கொண்டார்.

மாதாமாதம் கிடைக்கும் சம்பளமோ, மிகவும் கொஞ்சம். அது கொண்டு பெரிய குடும்பத்தைப் பாதுகாத்தல் எங்ஙனம்? ஆயினும், 'போதும்

என்ற மனமே பொன் செய்யும் மருந்து,' என்னும் முதுமொழியை அவர் கடைப்பிடித்தார்; அதனால், கவலை இல்லாமல் இனிதே காலங்கழிக்க முற்பட்டார். அவரது வருவாயும் ஆதரவும் கண்டு குடும்பத்தாரும் களிப்படைந்தனர்.

நான்கு வருஷ காலம் நல்லாசிரியராய் அவர் துலங்கி வந்தார். அவர் ஆசிரியராய் அமர்ந்த அடுத்த ஆண்டிலே (1885) காங்கிரஸ் மகாசபை உதயமாயிற்று. அன்று நடைபெற்று வந்த ஆங்கில ஆட்சியை அகற்றி, சுயராஜ்யம் எய்த வேண்டும் என்பதே அச்சபையின் நோக்கம்.

முதல் காங்கிரஸ் மகாசபை பம்பாய் நகரில் கூடிற்று. அதற்குப் போக வேண்டும் என்று அவருக்கு ஆவல் மிஞ்சியது. அலகபாது நகரிலிருந்து பம்பாய் போவதானல், செலவு அதிகம் பிடிக்கும். எனவே, தமது வருவாயையும் குடும்ப நிலையையும் மதித்து, அவர் அக்காங்கிரசுக்குப் போகவில்லை. ஆனாலும், அம்மகாசபையில் சேர்ந்து உழைக்கும் துடிப்பும் ஆர்வமும் அவரிடம் விஞ்சி நின்றன.

1886-ஆம் ஆண்டிலே, காங்கிரஸ் மகாசபை கல்கத்தா நகரில் நடந்தது. அதற்குப் பண்டிதர் ஒரு பிரதிநிதியாய்ச் சென்றார். அப்போது அவர் அரசாங்கக் கல்லூரியில் ஆசிரியராய் இருந்தார். அரசாங்கத்துக்கு எதிரான சபை அது. அத்தகைய நிலையிலும் தேசமே பெரிதென்று அவர் துணிந்து, பெருமிதத்துடன் சென்றார்.

அந்நாளில் அவருக்கு ஒரு வகையில் குருவாய் இருந்தவர் பண்டித ஆதித்திய ராம் என்பவர். அவரும் அரசாங்கத்திலே பெரிய உத்தியோகம் பார்ப்பவர்; சுதந்தரத்தில் நாட்டம் மிகுந்தவர். ஆதலின்,

அவரும் அம்மகாசபைக்குச் சென்றார். அவருக்குத் துணைவராகவே நம் பண்டிதரும் போனார். அரசாங்கத்தில் வேலை பார்ப்பவர் அரசியலிற்கலந்து கொள்ளக்கூடாது என்னும் ஒரு பொது விதி உண்டு.

அக்காங்கிரஸ் மகாசபைக்குத் தலைவராய்த் திகழ்ந்தவர், தாதாபாய் நௌரோஜி என்பவர். அத் தலைவரின் பேச்சைக் கேட்டதும் நம் பண்டிதருக்கு ஊக்கம் உதித்தது; பிரதிநிதிகளின் பேச்சைக் கேட்டதும் ஓர் உற்சாகம் ஓங்கியது; பின்பு தாமும் பேச வேண்டும் என்னும் ஆர்வம் எழுந்தது. அருகே இருந்த ஆதித்திய ராம் அதை அறிந்து, அவரைத் தட்டிக்கொடுத்தார். உடனே பேச எழுந்தார் நம் பண்டிதர்.

மாணவராய் இருந்த காலத்திலேயே பண்டித மாளவியா கல்விக் கழகம் நிறுவி, அதில் மாணவர்களைப் பேச வைத்தார்; தாமும் பேசிக் காட்டினார். சபை முன்னே பேசவேண்டும் என்னும் விருப்பம் இளமையில் உண்டான உள்ளக் கிளர்ச்சியின் பயனும்.

சமயப் பற்றில் சிறந்தவர் பண்டித மாளவியா. அதில் தேர்ச்சியும் எய்த வேண்டும் என்பது அவரது அவா. அது பற்றியே இந்து சமாஜம் என்பதும் அவரது ஊக்கத்தின் விளைவாய் உதித்தது. இச்சமாஜத்தை அவரே முன் நின்று நடத்தி வந்தார்; பல பெரியார்களை அழைத்துச் சொற்பொழிவு ஆற்றச் செய்தார். இவ்விதமெல்லாம் சபையின் முன்னே பேசப் பழகி வந்தார் அவர்.

காங்கிரஸ் மகாசபையிலே முதன்முதல் பேச எழுந்ததும், முன் பெற்றிருந்த பயிற்சி அவருக்குக் கை கொடுத்தது.

# 6. சபையில் சிறப்பு

காங்கிரஸ் மகா சபையிலே அன்றும் இன்றும் சொல்வன்மை உடையார்க்கே சிறப்பு அதிகம். சொல்லின் செல்வரையும், அச்செல்வரின் கீர்த்தியையும் அச்சபையிலேதான் கண்கூடாகக் கண்டு களிக்க முடியும்.

சொல்லின் செல்வரான தாதாபாய் நௌரோஜி, சுரேந்திரநாத பானர்ஜி, சென்னை நீதிபதி மணி ஐயர் முதலிய பலர் பேசி முடித்த பின் நம் பண்டிதர் பேச எழுந்தார். அச்சமயம் இருபத்து நான்கு வயதுக்கு உட்பட்டவர் அவர். மகா சபையில் பேசப்புகுந்ததும் அதுவே முதல் முறை. அச்சபையில் அவர் பேசியதன் கருத்து இது:

"பிரதிநிதி சபைகள் படைத்ததே ஆங்கிலேயருக்கு ஓர் ஆபரணம். அப்பிரதிநிதி சபைக்கு அவர்களையே பிதாக்கள் என்னலாம். அங்ஙனம் இருக்க, நமக்கும் பிரதிநிதி சபைகள் வேண்டும் என்று நாம் கோருகையில், அதனை அவர்கள் மறுக்கின்றார்கள். மறுக்கவே, அவர்களை உண்மையில் ஆங்கிலேயர் என்று நாம் சொல்ல முடியுமோ?

"அந்த ஆங்கிலேயருக்கு ஊனும் உயிரும் உயர்வும் தகவும் ஊட்டுவன அச்சபைகளே. அவற்றை நமக்கு மட்டும் மறுப்பின், நாம் அவர்களை என்னென்று சொல்வது! 'மக்களின் பிரதிநிதிகளைக் கேளாமல், அவர்கள் சம்மதம் பெறாமல், வரி விதிக்கக் கூடாது,' என்பது அந்த ஆங்கிலேயரின் அரசியற்கோட்பாடு அல்லவா?

"நம் தேசத்திலுள்ள சட்டசபைகளில் நம் பிரதிநிதிகள் இல்லை. ஆனாலும், ஆண்டுதோறும்

அச்சட்ட சபைகளிலிருந்து சட்டங்கள் கிளம்பு கின்றன; வரி விதிப்புப் புறப்படுகின்றது. அவற் றைக் குறித்து நமது கருத்தை அறிவிக்க, நமக்கு உரிமை வேண்டாவா? அவற்றினுக்கு உட்பட்டு வருந்துவதே நமது தலைவிதியா?

"'ஆங்கிலேயருக்குச் சரிசமமாக இந்தியரை யும் நடத்துவோம்,' என்று விக்டோரியா மகாராணி யார் கொடுத்த வாக்குறுதி காற்றில் பறப்பதோ? எல்லாரையும் ஒருபடியாகப் பாராமல், ஏற்றத் தாழ்வு காட்டுதல் அடுக்குமோ? நாம் வாய் மூடி மௌனிகளாய் இருக்க முடியாது. ஆடுமாடுகளைப் போல நம்மை நடத்தினால் அதற்கு நாம் ஒருப்படுவ தும் ஒவ்வாது."

"இருபத்தைந்து வயதே கொண்ட இளைஞர் இவ்வளவு அழகாக, அழுத்தமாக, ஆணித்தரமாகப் பேசுகிறாரே!" என்று சொல்லின் செல்வர் உட்பட அனைவரும் வியந்து பேசினர்; புகழ்ந்து பாராட்டி னர். 'பழுத்து முதிர்ந்த பேச்சாளரே இவர்!' என்று சபையோர் ஆனந்த ஆரவாரம் செய்தனர்.

அந்நாளில் காங்கிரஸ் மகாசபையின் காரிய தரிசியாராய் இருந்தவர், ஆலன் ஆக்டவோ ஹியூம் என்னும் ஆங்கிலேயர். அவர் அரசாங்கத்திலே முன்னம் நெடுநாள் வேலை பார்த்து விலகியவர்; பேசுவதிலும் எழுதுவதிலும் மிக வல்லவர். நம் பண்டிதரின் பேச்சைக் குறித்து அவர் அந்த ஆண்டின் அறிக்கையில் வரைந்திருப்பதன் கருத்து இது:

"சபையார் அனைவரும் மிகுந்த உற்சாகமும் பரபரப்பும் கொண்டு, பெரிதும் விரும்பிக் கேட்டு வந்த சொற்பொழிவு, உயர்வகுப்பு வேதியரான

மதன மோகன மாளவியா ஆற்றிய சொற்பொழிவேயாம். அவரது இனிய தோற்றம், அழகிய முக விலாசம், பொருள் நிறைந்த வாசகம், சொல் ஆழம் இவை எல்லாம் கண்டு எல்லாரும் தம்மை மறந்து, இமை கொட்டாமல் அவரையே வியந்து நோக்கி நின்றனர். அவரது பேருரை—பண்பான வாசகம்—அனைவர் மனத்திலும் பசுமரத்தாணி போலப் பதிந்தது!''

அன்று முதல் காங்கிரஸ் மகாசபையிலே பண்டிதருக்குப் பேரும்புகழும் ஏற்பட்டன. பண்டிதரின் பேச்சு என்றால், எல்லாரும் அண்ணாந்து கேட்கத் தலைப்படுவர்; 'அழகு! அழகு!' என்று ஆனந்தம் அடைவர். அது முதல், தாம் கண் மூடும் வரையில் அவர் ஒவ்வோராண்டும் மகாசபைக்குப் போவதில் தவறியதே இல்லை. 'பண்டித மாளவியா வந்திருக்கிறாரா?' என்று விசாரித்து அறியாத பிரதிநிதிகளும் இரார்.

அத்தகைய பண்டிதரின் பேச்சு வன்மை பாரெங்கும் பரவிற்று; அயோத்தி மாநகரில் இருந்த பெரிய ஜமீந்தாரின் உள்ளத்தையும் கவர்ந்தது.

## 7. பத்திராசிரிய பீடம்

'நூற்றுக்கு ஒருவரே சபைக்கு உரியவர். ஆயிரத்தில் ஒருவரே புலவர். பதினாயிரத்தில் ஒருவரே பேச வல்லவர்,' என்பர் பெரியோர். 'பேசப்பிறந்தாயோ சாகப்பிறந்தாயோ,' என்றும் சொல்லுவர். பண்டிதரின் பேச்சு வன்மை கண்டு, கல்கத்தாக் காங்கிரஸிலே பலரும் பூரித்தனர்.

அவ்விதம் பூரித்தவருள் ஒருவர் ராஜாராம பால சிம்மர். அவர் அயோத்தி நாட்டிலே ஒரு பெரிய ஜமீந்தார். இந்துஸ்தான் என்னும் பத்திரிகை ஒன்று அவருக்குச் சொந்தம். பண்டிதரிடம் அவருக்கு மதிப்பு உண்டு. சொல் வன்மையைக் காதினால் கேட்டதும், அப்பத்திரிகையின் ஆசிரியராய் அமரும் வண்ணம் பண்டிதரை அவர் வேண்டிக் கொண்டார்.

பண்டிதருக்கோ, மாணவருக்கு ஆசிரியராய் இருப்பதிலேயே விருப்பு அதிகம். 'வருங்காலத்திலே தேசத்தின் செல்வமாகும் இளைஞருக்கு நல்லறிவும் நேரிய நடையும் புகட்ட வேண்டும்,' என்பதில் அவருக்கு நாட்டம் மிகுதி. அந்நிலையில், பத்திராசிரிய பீடத்தில் அமர வலுவில் அழைப்பு வந்தது. சிறிது அவர் சிந்தித்துப் பார்த்தார்.

முடிவிலே, "மாணவருக்கு ஆசிரியராயின், ஆண்டுதோறும் ஒரு சிலருக்கே உயர்ஞானம் ஊட்டலாம்; பத்திராசிரிய பீடமாயின், நாள்தோறும், ஆயிரக் கணக்கான மக்களுக்கு அரிய உரை வழங்கலாம். எனவே, பத்திராசிரிய பீடம் பெருமையும் பொறுப்பும் மிகுதியும் உடையது," என்று அவர் தீர்மானம் கொண்டார்.

'இந்துஸ்தான்' என்ற பத்திரிகையின் ஆசிரியராய் அமர்ந்ததும், அவருக்கு முன்னையிலும் அதிக வருவாய் கிட்டியது. அதனால், பண்டிதர் தமது பெரிய குடும்பத்தை இனிது காப்பாற்றுதல் இலகுவாய் இருந்தது. ஏறக்குறைய மூன்று வருஷ காலம் அப்பீடத்தை அவர் அலங்கரித்து நின்றார்.

பண்டிதரின் பேச்சிலும் எழுத்திலும் நிதானமும் நேர்மையும் மிளிரும்; பொருளும் போதமும்

பொங்கும்; சொல்லில் வல்லவர், எழுத்திலும் வல்லவராய் விளங்குதல் கண்டு, எல்லாரும் புகழ்ந்தனர். அதிகாரிகளும் அரசாங்கமும் அவ்வாறே புகழுரை பகர, ராஜாராம பாலருக்கு ஆனந்தம் பெருகியது.

சிறிது காலம் சென்றதும், 'இந்தியன் யூனியன்' என்னும் பத்திரிகைக்கு அவர் ஆசிரியர் ஆனார். ஆனதும், அப்பத்திரிகையின் புகழும் பெருமையும் எங்கும் வீசத் தலைப்பட்டன. அந்நாளில் துலங்கிய கல்வியாளரும் பெருமக்களும் பண்டிதரின் எழுத்தைக் கண்டு இறும்பூது எய்தினர்.

மகாஜனங்களின் மனப்போக்கை ஒரு பக்கம் அவர் ஒழுங்குபடுத்தி வளர்த்து வந்தார்; மற்றொரு பக்கத்திலோ, மக்களின் மனக்கோளை அதிகாரிகளுக்கு விண்டுரைத்து விழுமிய ஊழியம் புரியலானார். பத்திரிகைத் தொழிலில் பண்பட்ட பேராசிரியர்களும் பண்டிதரின் எழுத்து நலமும் வேகமும் கண்டு, 'இணையிலா ஆசிரியர் இவர்!' என்று ஏத்தி உரைக்க நேர்ந்தது.

அப்பால், "இனி ஆங்கிலத்தில் எழுதுவதால் பெரும்பயன் காண முடியாது; இங்கே ஜனசமூகத்தின் தாய் மொழியாய் வழங்கும் இந்தி மொழியில் பத்திரிகை நடத்திப் பாமரர்க்கும் பயன்பட வேண்டும்," என்பது பண்டித மாளவியாவுக்குத் தோன்றியது. அதன் பலனாக 'அப்யுதயா' என்னும் இந்தி வாரப் பத்திரிகையை அவர் தோற்றுவித்தார். அதில் வாரந்தோறும் பலபல கட்டுரைகளை வரைந்து, அரசியல், பொருளாதாரம் முதலியவற்றைத் தெளிவாக விளக்கி வந்தார். அவற்றை அனைவரும் விரும்பிப் படித்து, விரிந்த அறிவு எய்தினர்.

அப்பத்திரிகையின் வாசகர் வெகுவாகப் பெருகினும், அதற்கு ஏற்றவாறு வருவாய் அதிகரிக்கவில்லை. அதனால், அவருக்குப் பணமுடை ஏற்பட்டது. ஆனாலும், 'ஜன சமூகம்' எனப்படும் பெரிய குடும்பத்துக்கு உழைத்து வருவதில் பணக் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் அவர் பொருட்படுத்தவில்லை.

அலகபாது நகரிலே 'லீடர்' என்பது ஓர் ஆங்கிலத் தினசரி. அது மிக்க செல்வாக்குப் படைத்தது. அதற்கு அதன் எழுத்தே மூதற்காரணம். அந்தப் பத்திரிகையைத் தோற்றுவிக்க முயன்றவர்களுள் பண்டித மாளவியாவே முதல்வரென மொழிய வேண்டும்.

## 8. வழக்கறிஞர் வேலை

எந்தத் தேசத்திலும் அரசியல் கிளர்ச்சியில் ஆழ்ந்து பொதுநலச் சேவையில் முனைந்து, மிக்க புகழ் படைத்தவர்களுள் வழக்கறிஞரே பலராவர். சட்ட ஞானத் தேர்ச்சியினால் அரசியலின் நுட்பங்களை அவ்வழக்கறிஞர்களே நன்கு ஆராய்ந்து, ஏற்ற முறையில் சீர்திருத்தங்கள் சொல்லி, ஏற்றம் அடைதல் எளிதாகும்.

நமது பாரத பூமியிலே அன்றும் இன்றும் பிரபல பொதுஜனத் தலைவர்களுள் வழக்கறிஞர்களே முதன்மையானவர்கள். பண்டித மாளவியாவின் பெருமதியையும் அரிய பண்பையும் கண்டறிந்த பெரியார் பலரும் அவரை வழக்கறிஞராகும் வண்ணம் வற்புறுத்தி வந்தனர். அவர்களுள் ராஜாராம பாலரும் ஒருவர்.

'வழக்கறிஞர் பரீட்சைக்குப் படிக்கும்போது செலவு பெருகும்; வருவாய் குறையும். அது குறித்துச் சிறிதும் கவலை வேண்டா' என்று அந்த ராஜா தைரியம் கூறினர். அன்று காங்கிரஸ் மகாசபையின் காரியதரிசியாரான ஹியூம் என்பாரும், 'வழக்கறிஞரானல், இன்னும் பெருமையாக ஊழியம் புரியலாம்,' என்று பண்டிதரை வற்புறுத்தினர்.

'வழக்கறிஞரானல் வாய்மையினின்று பிழைக்க நேருமே!' என்று முதலில் பண்டிதருக்குக் கவலை பிறந்தது. அப்பாலோ, 'எல்லாம் நம் கையில் உளது. மெய்ம்மையினின்று இம்மியும் தவறாது நடந்து பார்க்கலாம்,' என்று அவர் துணிந்தார்; அவ்வாறே 1891-ஆம் ஆண்டு சட்டப் பரீட்சைக்கு முயன்று படித்து வந்தார்.

காங்கிரஸ் காரியங்களில் மிக்க அக்கறை காட்டுதல் பண்டிதரின் இயற்கை. சட்டப் படிப்பில் முனைந்ததும், அந்த அக்கறை குறைந்தது. அது கண்டு பண்டித அயோத்தியா நாதர் என்பார் பெரிதும் வருந்தி, ஹியூம் என்பாரிடம் முறையிட்டார். அதற்கு "அதுவே சரி; படிப்பில் முனைந்தால், பிறவற்றில் கவனம் குறைதல் இழுக்கு அன்று," என்று ஹியூம் பதிலளித்தார்.

பின்பு, ஹியூம் என்பார் பண்டிதரை நோக்கி, "மதன மோகனரே, ஆண்டவர் உமக்கு மிக்க மதி நலம் அளித்துள்ளார். அப்பெருமதிகொண்டு, பத்தாண்டு வழக்கறிஞர் தொழிலில் முனைந்து நில்லுங்கள். உயர்பதவி பெறலாம். உன்னத வருவாயும் எய்தலாம். அவ்விரண்டும் அப்பால் உமக்குப் பக்க பலமாய் நிற்க, உமது பொதுநலச் சிந்தையும் தேச சேவையும் பன்மடங்கு பெருகும். பெருமையெல்லாம் கொண்டு சேர்க்கும்!" என்ருர்.

எல். எல். பி. என்னும் சட்ட ஞானப் பட்டம் பெற்றதும், பண்டித மாளவியா வழக்கறிஞராய் வேலை பார்க்கத் தொடங்கினர். வாய்மை நிறைந்த வழக்குகளையே அவர் ஏற்றுக்கொண்டார். பொய்ம்மை கலந்த எதையும் அவர் ஏற்கமாட்டார்; வழக்காளருக்கு நியாயம் தேடிக் கொடுப்பதிலேயே கண்ணுயிருப்பார். வருவாய்ப் பெருக்கில் அவரது நோக்கம் பதியாது. நியாயத்தை நிலை நாட்டும் நேர்மையிலேயே ஊக்கம் உயரும்.

வழக்கறிஞர் தொழிலில் முனைந்து நின்றாலும் பொதுநல முயற்சிகளை அவர் புறக்கணிக்கவில்லை. பல வகைச் சேவைகளில் அவர் பேரூக்கம் கொண்டார். ஆயினும், பிறவிக் குணமான சமூக சேவை அவரது சிந்தையை விட்டு அகலுமோ? வக்கீல் தொழிலிலே அவரது நடத்தையின் நேர்த்தியும், நெறியின் மேன்மையும் சில நாளைக்குள் அவருக்கு எல்லாச் சிறப்பும் ஊட்டின. அத்தொழில் துறையில் அவருக்கு உச்சநிலை கிட்டியது. 'பிரபல வழக்கறிஞர்' என்று அவர் பெரும்பெயர் பெற்றார்.

ஹியூம் என்பார் கனிந்து கூறிய வண்ணம், வழக்கறிஞர் தொழிலிலேயே அவர் முனைந்து இருந்தால், வங்காள சித்தரஞ்சன தாஸ், பண்டித மோதிலால் நேரு என்பவர்களைப் போல மிகத் திரண்ட செல்வம் குவித்திருக்கலாம். குடும்பத்தின் பாதுகாப்பை எண்ணியே அவர் வழக்கறிஞரானவர். அப்பாதுகாப்பினுக்கு ஏற்ற வருவாய் வந்து எய்தியதும், மேலும் வருவாயைப் பெருக்க அவர் விரும்பவில்லை.

தமது உள்ளத்தையும் உழைப்பையும் மட்டுமே பொதுநலப் பணியில் அவர் ஈடுபடுத்தினர் அல்லர்; வருமானத்திலும் ஒரு பெரும்பாகத்தை அப்பணிக்

கெனவே அவர் செலவிட்டு வந்தார்; பலருக்கு உபகாரியாயும் ஓங்கி உயர்ந்தார். மற்ற வழக்கறிஞரும் நீதிபதிகளும், மாளவியா வாதிக்கிருர் என்றால், சிந்தை குவிந்து சிரத்தையுடன் கேட்டு, மகிழ்ச்சியின் எல்லே காண்பார்கள்.

## 9. காங்கிரஸ் தலேவர்

மூன்ருவது காங்கிரஸ் மகாசபை சென்னே மாநகரிலே, 1887-ஆம் ஆண்டின் இறுதியிற் கூடியது. அப்போது சட்ட சபைகளில் நம் பிரதிநிதிகள் இல்லே. அது குறித்து, பண்டித மாளவியா மிக அழுத்தமாக, ஆனல் அடக்கம் நிரம்பப் பேசினர்:

"எங்களிடமிருந்து பல வகை வரிகளே வசூல் செய்கையில், வரி விதிக்கும்போது எங்களது வார்த்தையைக் கேட்க வேண்டாவோ? ஆங்கிலேயரின் அரசியல் வேதத்தில் அதுதானே முதல் வாசகம்! இந்தியராகிய எங்களுக்கு அது கிடையாதோ?" என்று பண்டிதர் பேசியதும் சர் மாதவராவ், பாரிஷ்டர் நார்ட்டன் போன்ற சென்னேப் பெருமக்கள் மூக்கில் விரல் வைத்து ஆசி கூற நேர்ந்தது.

அந்த ஆண்டின் காங்கிரஸ் அறிக்கையில் காரியதரிசி ஹியூம் இவ்வாறு குறிப்பிட்டார்:

"பிறகு பேச எழுந்தவர் பண்டித மதன மோகனர். அவர் ஆண்டிலே இளேஞர்; அறிவிலோ, பெரியவர்; காங்கிரஸினிடம் பற்று மிகுந்தவர். அவரது பேச்சு மிகமிக உன்னதம் வாய்ந்தது. ஒவ்வொரு சொல்லும் கேட்பாரின் மனத்திலே ஊடுருவிப் பாய்ந்தது."

தேசத்தின் தென்கோடியான சென்னை மாநகரில் காங்கிரஸ் கூடுகிறது. வடகோடியிலிருந்து பலர் பிரதிநிதிகளாக வருவரோ, வாராரோ என்று காரியதரிசிக்குக் கவலை பிறந்தது. அதனை அறிந்ததும், பண்டிதர் தமது மாகாணத்திலே ஊர் ஊராகச் சென்று, காங்கிரஸைக் குறித்து எடுத்துச் சொல்லி, அனைவரையும் தட்டியெழுப்பினர். பிரயாணச் செலவுக்கு அவரிடம் போதிய பணம் இல்லாவிடினும், அதனை அவர் சட்டை செய்யவில்லை. அவ்வாண்டு வடகோடி மாகாணத்திலிருந்து ஐம்பது பிரதிநிதிகள் சென்னையில் நடந்த காங்கிரசுக்கு வந்தார்கள்.

1888-ஆம் ஆண்டிலே 'காங்கிரஸ் மகா சபையை எங்கே கூட்டுவது?' என்று பலருக்குத் திகைப்பு உண்டாயிற்று. அச்சமயம் உற்சாகம் மிகுந்து, அச்சபையை அலகபாதுக்கு அழைத்தார் பண்டிதர். ஆரம்பத்திலே பெரிய மனிதர் என்பார் அதற்கு ஆதரவு தரவில்லை. 'மகா சபையை வைத்து நடத்தி நிருவகித்தல் எப்படி?' என்று பலரும் ஏங்கி நின்றனர். பண்டிதரோ, தமது சலியா உழைப்பும், குறையா ஊக்கமுமே துணையாகக்கொண்டு முனைந்தார். அதனால், மிகவும் சிறப்பாக அலகபாது காங்கிரஸ் நடந்தேறியது.

'தேச சேவையே தரும சேவை; அதுதான் தெய்வ சேவை,' என்பது பண்டிதரின் கருத்து. அக்கருத்து அகன்று ஆழ்ந்து நின்றதனால், பற்பல துறைகளிலும் அவர் பாடு பட்டு வந்தார். அதற்கு நம் தேச மக்கள் யாது கைம்மாறு செய்யக்கூடும்? 1909-ஆம் ஆண்டிலே அவருக்குக் காங்கிரஸ் சபையின் முடி சூட்டினர். அன்று மக்கள் அளிக்க வல்ல உயரிய சிறப்பு அதுதான்.

அது கேட்டு இங்கிலாந்தில் பிரசுரமாகும் மான் செஷ்டர் கார்டியன் என்னும் பிரபல ஆங்கிலப் பத்திரிகை எழுதியது இது:

"மகா சபையில் முன்னம் தலைமை வகித்த பெரியார்களைப் போல, பண்டிதர் பிரபல மனிதர் அல்லர்; ஆயினும், முதல் தரமான அரசியல் வாதி; அனைவரும் மெச்சத் தகுந்த தகுதி உள்ளவர். ஆரம்பத்தில், ஆசிரியராய் இருந்து, அப்பால் பத்திரிகாசிரியராகி, அதன் பின் வழக்கறிஞராய் எத்திக்கும் விளங்கி நிற்பவர்; கல்வியறிவில் ஈடும் எடுப்பும் இல்லாதவர். சுரேந்திரநாத பானர்ஜிக்கு அடுத்தபடியாகச் சொற்பொழிவில் சிறந்தவர் அப்பண்டிதரே!"

அன்று நம் தேசமெங்கும் அரசியல் கொந்தளிப்பு மிக அதிகம். அரசியல் வாதிகளுக்குள் வேற்றுமை மிகுந்து நின்றது. தீவிர வாதிகள் ஒதுங்கி இருந்தார்கள். அதிகாரிகள் அடக்குமுறைகளைக் கையாள, வாலிபர் துள்ளி எழுந்து வெடிகுண்டு வீசி வந்தனர். அரசியற்கொள்ளைகளும் கொலைகளும் மலிந்தன. அதிகார வர்க்கத்தாரின் தடபுடல் தலை மிஞ்சிவிட்டது. அது கண்ட பண்டிதர் அப்போதே இரு சாராருக்கும் அஹிம்ஸா போதம் புரிந்தார்.

காந்தி மகானே அஹிம்ஸையின் கர்த்தர் என்பர். ஆனாலும், பண்டித மாளவியா அன்றே தமது அக்கிராஸன பீடத்திலிருந்து அஹிம்ஸையை வலியுறுத்தி விளக்கினர்; நமது பாரத பூமிக்கு அதுவே அரிய பண்பாடு என்றார்; ஹிம்ஸை என்பது மேனாட்டின் இயற்கை என்றார்; மக்களும் அரசும் ஹிம்ஸையை விடுத்து, அன்பு முறையைக் கடைப் பிடிக்க வேண்டும் என்று எச்சரிக்கை செய்தார்.

# 10. ஊழிய உருவம்

பண்பட்ட ஊழியரான பேரறிஞரையே தேசத்தின் முடி சூடா மன்னர் என மக்கள் கொள்வார்கள். மகாசபையின் தலைமை தாங்கும் முன்னம் பண்டித மாளவியா புகுந்து உழைத்த துறைகள் பல. மக்களுக்கு நன்மை பயக்கும் துறை அனைத்திலும் அவரது மனம் பதிந்தது.

முதலில், தமக்குச் சொந்த நகராகிய அலகபாதின் நலத்தில் அவர் சிந்தை நிலைத்தது. அந்நகராண்மைக் கழகத்தில் அவர் ஓர் உறுப்பினர் ஆனார்; பல வகையிலும் நகரின் நலத்தை வளர்த்தார்; அச்சபையின் உபதலைவர் பதவியில் அமர்ந்து அருந்திறமை காட்டினார்.

ஒரு சமயம் அந்நகரிலே பிளேகு நோய் தோன்றியது. அது கண்டு ஜில்லாக் கலெக்டர் கலங்கி, நம் பண்டிதரின் உதவியை நாடினார். உடனே பண்டிதர் அக்கழக ஊழியருடன் புறப்பட்டு, இரவு பகலாகப் பாடு பட்டு, அக்கொடுநோய் கண்ட இடங்களையெல்லாம் தூய்மைப்படுத்தினார்.

அந்நகரிலே ஒரு வீதியில் வீடுதோறும் மரணம் நேர்ந்தது. அந்த இடத்தையே பண்டிதர் குறிக்கொண்டு, அல்லும் பகலும் உழைத்து வர, ஏனைய உறுப்பினரும் துணையாய் வந்து சேர்ந்தனர். ஏறக்குறைய இரண்டாயிரம் குடும்பங்கள் அந்நோய் வாய்ப்பட்டுத் தனி விடுதிகளில் தங்கி இருந்தன.

காலை மாலை இரண்டு வேளைகளிலும் அவ்விடுதிகளை அவர் சென்று பார்த்து வருவார்; ஒவ்வொரு

வரையும் தனித்தனி கண்டு பேசி, அவர்களின் நிலையை அறிந்துகொள்வார்; எல்லாருக்கும் மன வலி ஊட்டுவார்; வேண்டுவதை எல்லாம் தேடிக் கொடுப்பார். அது கண்டு அம்மக்களும் பிறரும் அவரை வாயார வாழ்த்தி, மனமாரத் துதித்தார்கள்.

அலகபாது நகரின் கலாசாலைகளில் எண்ணிறந்த மாணவர் படித்து வந்தனர். அவர்களுட் பெரும்பாலார் வேற்று நகரிலிருந்து வந்தவர். அவர்களுக்கு நல்ல உணவுச் சாலை இல்லை. அது பற்றி அவர்கள் பெரிதும் வருந்தினார்கள். பண்டிதர் அதை அறிந்ததும், பரபரப்புக் கொண்டார்.

அம்மாணவருக்கு உரிய உணவுச் சாலை அமைத்தே தீருவது என்று அவருக்கு உறுதி பிறந்தது. நகரந்தோறுஞ் சென்று, பணம் வசூலிக்க வேண்டும். அவ்வாறு செல்ல அவரிடம் போதிய கையிருப்பு இல்லை. ஆயினும், அவர் தமது செலவில் எங்கும் சென்று, ஏராளமாகப் பணம் திரட்டினார்; போஜன சாலைக்குரிய பெரிய கட்டடம் அமைத்தார்.

மாணவருக்கு நல்லுணவு தரும் அம்மாளிகை இன்றும் பார்க்க வெகு நேர்த்தியாய் இருக்கும். சொந்தவீட்டில் சுகமே வாழ்வது போல, மாணவர் அனைவரும் அச்சாலையில் உண்டு களித்து வந்தனர். அது கண்டு கல்வியதிகாரிகள் அவரை மிகவும் கொண்டாடினார்கள். மாணவரின் பெற்றோரிடமிருந்து அவருக்கு வந்த வாழ்த்துரைகள் கணக்கிலவாகும்.

மாணவரின் நலத்திலும், கல்வியின் பெருக்கிலும் அவர் கருத்து நிரம்பியவர். ஆதலின், பல்கலைக்

கழக அதிகாரிகள் பண்டிதரை விரும்பியழைத்து, அவரை ஓர் அங்கத்தினராக அமர்த்தி மகிழ்ந்தனர். பதினறு வருஷம் அலகபாது பல்கலைக் கழகத்தின் அங்கத்தினராய் அவர் இருந்து வந்தார். கல்வி முறை, பாடத்திட்டம், போதனையின் போக்கு இவை எல்லாம் உயரும் வண்ணம் அவர் கூறிய உபாயங்களை அதிகாரிகள் அப்படியே ஏற்றுக்கொண்டார்கள்.

"மாணவரிடம் நற்குண நற்செயல்கள் நிரம்ப வேண்டின், தெய்வப் பற்று அவசியமாகும்; அடுத்தபடி சமயஞானமும் தேவையாம். அவ்விரண்டும் இல்லையாயின், மாணவரும் மானிடரும் முன்னேறுதல் முடியாது. ஆதலின், மாணவருக்குச் சமயக் கல்வி புகட்டவேண்டும்," என்று அவர் வலியுறுத்தினர். "அதற்கு ஏற்ற புத்தகங்கள் இல்லையே!" என்று அதிகாரிகள் கூறினர்கள். அவ்வளவில் சிறந்த பாட புத்தகங்களை அவர் எழுதிக்கொடுத்தார்.

ஐக்கிய மாகாணத்திலே சட்டசபை ஏற்பட்டதும், அதில் பண்டிதர் புகுந்து, முதலில் தன்னந் தனியே வாதாடி வந்தார். எதிலும் ஆழ்ந்த அறிவு, அரிய கருத்து, தர்க்க நேர்த்தி முதலியன காட்டி, அவர் மன்றுடுவார். அது பார்த்து அதிகாரிகளும் அதிசயம் மிகுந்தார்கள். அந்நாளிலே அம்மாகாண சட்டசபையில் அவரே திலகமாய் விளங்கினர். அரசின் வரவு செலவுக் கணக்கை அவரைப்போல ஆராய்ந்து பேசுபவர் அருமை.

# 11. சமயஞானி

மனிதர் ஒழுங்குடன் வாழ வேண்டியே, அரசாங்கம் சட்டதிட்டம் செய்கின்றது. அவற்றின்படி நடந்தால், மனிதர் நன்கு வாழலாம். அச்சட்டதிட்டங்கள் பெருமனிதர் இயற்றியவை.

மானிட கோடிகள் நன்கு வாழும்பொருட்டு, ஆண்டவரது அருள் வாய்க்கப்பெற்ற பெரியோர் பல சட்டதிட்டங்கள் செய்துளர். அவை வேதங்கள், சாஸ்திரங்கள் எனப்படும். அவற்றின்படி மனிதர் நடந்து வந்தால், நல்லவர்களாய் இருக்கலாம்; பிறருக்கும் நன்மை புரியலாம்.

அந்த வேத சாஸ்திரங்களுக்கு இணங்க நடத்தலையே சமய ஒழுங்கு, அல்லது மத மார்க்கம் என்பர். எடுத்த பிறவியின் பயனை அடைய வழி காட்டுவதே மதம் ஆகும். கீர்த்திக்கு வழி காட்டுவதும் சமயந்தான். மதக் கடமையையே தருமம் என்றும் சொல்லுவர்.

உலகிலே பற்பல மதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மதத்திற்கும் ஒவ்வொரு பெயர் உண்டு. அவற்றின் பெயர்களோ, அவற்றை ஏற்படுத்தியவரின் பெயரைத் தழுவியே இருக்கும். புத்த மதம் புத்தராலும், கிறிஸ்து மதம் ஏசுநாதராலும், முகம்மதிய மதம் முகம்மதுவினாலும் ஏற்பட்டனவாம்.

நமது பாரத பூமியிலே இந்துக்களே அதிகம். இந்துக்களின் மதத்தை இந்துமதம் என்று சொல்லுவர். "அதனை யார் ஏற்படுத்தினர்? அஃது எப்போது ஏற்பட்டது?" என்பவற்றை எளிதில் உரைக்க முடியாது. ஆதலின், அந்த இந்து மதத்தை **'வேதமார்க்கம்'** என்பர் பெரியோர். சிலர்

சனுதன தருமம் என்பர். அந்த இந்து மதம் அனுதி காலந்தொட்டு இருந்து வருவதாம்.

இந்து மதத்தில் நான்கு வேதங்கள், ஆறு சாஸ்திரங்கள், அறுபத்து நான்கு கலைஞானங்கள் உண்டு. அந்த நான்கு வேதங்களில் இருக்கு வேதமே உலகிலே மிகமிகப் பழமையானது என்று பேரறிஞர் சொல்லுவர். ஒரு சமயம் உலகெங்கும் இந்து மதமே பரவியிருந்தது; அப்பால் அதன் கிளைகளாகவே பலபல மதங்கள் தோன்றின என்னலாம். இதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன.

அத்தகைய இந்து மதத்தில் பிறந்தவர் பண்டித மதன மோகன மாளவியா; அதில் மிகுந்த பற்றும் உடையவர்; அதன் கடமைகளில் சிறிதும் தவருதவர்; மேலும், வேத சாஸ்திர விதிகளை நன்கு அறிந்தவர்; அவற்றினின்று இம்மியும் தவறி நடவாதவர். அவரை 'வேதவித்து' என்றே சொல்ல வேண்டும்.

"எல்லாரும் வேத சாஸ்திரவிதிகளை நன்கு அறிந்து செம்மையாய் நடந்து வந்து, சீரும் சிறப்பும் அடைய வேண்டும்," என்பது அவர் கொண்ட அவா. தாம் கண்ட இன்பத்தை வையகமும் கண்டு களிக்கவேண்டும் என்னும் எண்ணம் கொண்டே இளமையில் அவர் 'ஹிந்து சமாஜம்' என்னும் சபையை அமைத்தார்; அந்தச் சமாஜத்தின் மூலம் இந்து மத தர்மங்களை அனைவருக்கும் புகட்டி வந்தார்.

ஆங்கிலக் கல்வியிலே தேர்ந்தவருட்பலர் அன்று அன்னிய நாகரிகத்திலும் நடையுடையிலும் மூழ்கி, சுயதருமத்தை அறவே மறந்துவிட்டனர். அது கண்டு பண்டிதரின் மனம் படாத பாடு

பட்டது. ஆதலினால், 1906-ஆம் ஆண்டிலே சனாதன தரும மகாசபை என்பதை அவர் கூட்டினார். இந்து சமய நூல்களில் சாலச்சிறந்த பெரியார் களைக்கொண்டு சமய உயர்வையும் ஞானத்தையும் பரப்பினார்; தாமும் அருமை மிகுந்த சொற் பொழிவு ஆற்றி, அம்மதத்தின் மேன்மையை வலியுறுத்தினார். அதுபற்றி அவர் மேற்கொண்ட உழைப்பும், செய்த பணச்செலவும் இவ்வளவு அவ்வளவு அல்ல.

“ஜன சமூகத்தின் சிறு மூளைகள் போன்ற சிறுரும் சிறுமியரும் சமயக் கடமைகளைச் செவ் வனே உணர்ந்துகொண்டால், பின்னாளில் பெரி தும் பலன் அடையலாம்,” என்பது அவர்கோட்பாடு. ஆதலின், சிறுவர் சிறுமியருக்குச் சமயஞானம் நிரம்புவதற்கான வகை துறைகளை எல்லாம் அவர் தேடியமைத்தார்; அதற்கு ஏற்ற சிறிய அரிய நூல்களையும் தாமே எழுதி உதவினார்; பிறரையும் எழுதுமாறு தூண்டினார்.

‘ஒழுக்கம் விழுப்பம் தரலான், ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.’

என்று தமிழ்மறை கூறும். ‘ஒழுக்கமே பெருமை அளிக்கும். ஆதலால், உயிரினும் சிறந்ததாக ஒழுக் கத்தைக் காக்க வேண்டும்,’ என்பது அக்குறளின் கருத்து. அன்றியும், ‘வேதத்தை மறந்துவிட்டா லும், மீண்டும் அதனைக் கற்றுக்கொள்ளலாம். ஆனால், பிறப்பின் ஒழுக்கத்திலிருந்து தவறினால், பார்ப்பான் கெட்டுவிடுவான்,’ என்றும் மற்றொரு குறள் எடுத்துரைக்கும். நம் மாளவியா, தாம் பிறந்த குலத்துக்கு உரிய ஒழுக்கத்திற் சிறிதும் குன்றியது இல்லை; நாள்தோறும் நீராடுவதிலும்,

காலை மாலைக் கடன்களைச் செய்வதிலும் தவறியது இல்லை. சனாதன தருமத்துக்கு ஓர் எடுத்துக் காட்டாகவே அவர் இருந்து வந்தார்.

ஆதலினால், 'மாளவியா வருகிறார்!' என்றால், மகாத்துமா காந்தியும் எழுந்து நின்று, வணங்கி வரவேற்பது வழக்கம். மன்னவரும் மகா ராஜாக்களும், மண்டலீகரும், பெருமக்களும் மதன மோகனர் மீது பரிவு கூர்ந்து, 'தருமாத்துமா' என்று அவரை வழங்குவர். திருவள்ளுவர் கூறிய வண்ணம், அந்தணராயும், மறை வல்லவராயும், ஒழுக்கத்தில் உயர்ந்தவராயும் துலங்கியவர் பண்டித மதன மோகன மாளவியாவே!

## 12. இந்து மகாசபை

இந்துக்கள் ஒரு காலத்திலே உலக அரங்கில் உயர்நிலை எய்தியிருந்தார்கள். பல காரணங்களினால் அந்த உயர்நிலையினின்று அவர்கள் நழுவிவிட்டார்கள். 'மாடு இளைத்தாலும் கொம்பு இளைக்காது,' என்பர். அது போல அவர்களின் பழம்பெருமை இளையாமல் இருந்தது. ஆனாலும், பழைய உன்னதநிலை வரவேண்டும் என்று மாளவியாவுக்கு ஆர்வம் ஓங்கியது.

ஆதலினால், இந்துக்களின் பழமையான சமய உயர்வு, கலை ஞானம், நாகரிகம் முதலியவற்றை உயிர்ப்பிக்க வேண்டும் என்று அவர் ஆவல் கொண்டார். அவர்கள் வலிமை அற்று, ஒற்றுமை குன்றி, உயர்வு இழந்து, கோழைகளாய் வாழ்தல் கண்டு, அவர் கண்ணீர் வடித்தார்.

இந்துக்கள் முன்போலவே வன்மை எய்தினால் அல்லாமல், சமூகத்தைக் காக்கவும், சமயத்தை

உயர்த்தவும், சுயராஜ்யத்தை அடையவும் முடியா தென அவருக்குத் தீர்மானம் பிறந்தது. பிறக்கவே, இந்து மகாசபையை அவரும் லாலா லஜபதி ராய் என்பாரும் சேர்ந்து, 1924-ஆம் வருஷம் ஏற்படுத்தினர்.

இந்துக்களிலே பற்பல வகுப்பினர் உண்டு. அவர் அனைவரையும் அன்பு நார் கொண்டு பிணைத்தல் அச்சபையின் நோக்கம்; முகம்மதியர், கிறிஸ்தவர், சீக்கியர், பார்ஸியர் முதலிய அனைவரிடமும் ஒருமையாக வாழும் வழி கோலுதலும் அதன் கருத்தாம். பிற சமூகத்தாரிடம் அச்சபைக்கு வெறுப்பு இல்லை. அஹிம்சையே இந்து மதத்தின் அடிப்படை அல்லவா?

அச்சபையின் கருத்தைக் குறித்து மாளவியா பேசி இருப்பது இது: "இந்து சமயத்தின் விதி முறைக்கு ஒப்ப நாம் நடந்து வந்தால், நமது சமூகம் சீர்பெறும்; நம் நலபலன்களும் பெருகும்; உலகமும் உய்யும்; அன்பும் அருளும், நெறியும் நேர்மையுமே நமது மதத்தின் உயர்வுக்கு அறிகுறிகள்.

"டில்லிமா நகரிலிருந்து அரசு செலுத்திய கடைசி இந்து சக்கரவர்த்தியார் பிருதிவி ராஜர் என்பவர். அவர்மீது படையெடுத்துவந்த முகம்மது கோரியை இரணகளத்தே அவர் சிறை செய்தார்; பின்பு அன்புரை கூறி, அருள் சுரந்து, அம் முகம்மது கோரியை விடுதலை செய்தார். யாருக்கும் துன்பம் இழைத்தல் கூடாது என்பது நமது சமயத்தின் சிறந்த நோக்கம். என்றாலும், பிறரால் நாம் துன்பம் அடையக்கூடாது என்பதையும் நாம் மறக்க முடியுமா? எனவே, நாம் வன்மை மிக்கோராய் விளங்குதல் வேண்டும்.

"அரச அதிகாரத்தை நமது சமயம் உயர்வாக மதித்தது இல்லை; தருமத்தையே உயர்வாகவும் உயிர்நிலையாகவும் கருதியது. நமது பூமியின் உயர்வுக்காக 1885-ஆம் ஆண்டு முதல் காங்கிரஸ் மகாசபை பெரிதும் போராடி வருகின்றது. ஒரு சில பெருமக்களைத் தவிர முகம்மதிய சமூகம் அம் மகாசபையில் சேர்ந்துழைக்கவில்லை.

"இந்துக்களும் முகம்மதியரும் சச்சரவின்றி வாழ்தல் வேண்டும். நமது சமயம், நமது ஆலயம், நம் மாதர், நமது குலம் இவற்றினுக்கு ஆபத்து நேருங்கால், நாம் மார்பு தட்டி முன் வந்து, அந்த ஆபத்தைப் போக்கி, எல்லாரையும் காத்தல் வேண்டும். ஆபத்தான சமயத்தில் நாம் கைகட்டி நின்று, வாய்மூடி மௌனிகளாய்க் கிடத்தல் அழகு ஆகாது.

"அனைத்தும் வல்ல ஆண்டவன் அறிய உரைக்கின்றேன்: முகம்மதியருக்குத் தீங்கு இழைக்க நமது சபை கனவிலும் கருதாது. தங்கள் சோதரிகள், தாய்மார்கள், மனைவியர்கள் இவர்களின் மானத்தைக் காக்கவும், சமய உயர்வை நிலைநாட்டவும் இந்துக்களால் இயலவில்லையானால், இந்து சமூகம் அடியோடு அழிந்து போதலே மேலாம். கோழைத்தனமும், வன்மைக் குறைவும் நம்மை விட்டு அகலுதல் வேண்டும். இந்துக்கள் என்று சொல்லிக்கொள்ள நம்மவர் தயங்குவது ஏன்?"

இந்துக்களும் முகம்மதியர்களும் பாரத பூமியின் இரு கண்களே. இதுவே அவர் கொள்கை. யாரிடமேனும் அசத்தியமோ அநீதியோ காணின், அவர் சகியார். யாருக்கும் உரிய உரிமை கிட்ட வேண்டும் என்பதை அவர் விரும்புவார். ஆனால்,

வரம்புமீறி ஒரு சாராருக்கு அதிக உரிமை அல்லது சலுகை அளிக்க, அவர் ஒருப்படார்.

அவர் காலத்தில் இந்து முஸ்லீம் பிணக்குத் தலை விரித்து ஆடியது. சத்தியம், தருமம் இரண்டையும் ஆதாரமாகக் கொண்டு, அப்பிணக்கைப் போக்கவேண்டும் என்று அவர் பாடுபட்டு வந்தார்.

## 13. அருள் வெள்ளம்

யாவருக்கும் ஒழுக்கமே உயர்வு அளிக்கும். ஒழுக்கத்தில் குன்றினால், இழிவே ஏற்படும். ஆதலினால், உயர்வு தாழ்வுகளுக்கு ஒழுக்கமே காரணம் ஆகும். அவரவர் செய்யும் தொழிலுக்கும், நடக்கும் பான்மைக்கும், பேசும் சொல்லுக்கும் ஏற்றவாறு ஏற்றத் தாழ்வுகள் நேரும். ஏற்றம் அடையவே எவரும் விரும்ப வேண்டும்; தாழ்வுக்கான தன்மையை அறவே ஒழிக்க வேண்டும்.

ஆதியிலே இந்து சமூகத்தில் குணவானையே உயர்ந்தவன் என்று கொண்டாடினர்; குணக் கேடனையே தாழ்ந்தவன் என்று கருதினர். சமயத்தின் விதியும் அதுவேயாகும். பிறப்பினால் மட்டும் உயர்வு தாழ்வுகள் உண்டாவதில்லை. நிலை தவறின எவனும் தாழ்வு அடைதல் திண்ணம். குலத்துக்கோ, சமூகத்துக்கோ, தேசத்துக்கோ தீங்கு இழைப்பவனை வெறுத்தலும், ஒதுக்கி வைத்தலும் உண்டு. ஆயினும், அவனும் மனிதனே ஆவான்.

இந்து சமூகத்திலே ஒரு சாராரைத் தீண்டாதார் என்று கருதி வந்தனர். 'அஃது எப்போது, யாது காரணத்தால் உதித்தது?' என்பதை இங்கு ஆராய்வதற்கு இல்லை. 'கிட்ட வரக்கூடாது;

எட்டியேயிருக்க வேண்டும்,' என்று ஒதுக்கப்பட்டவர்களுட்சிலரைப் புறச் சமயத்தார் தமது மதத்திற்கு இழுத்துக்கொண்டனர்; அவர்களுக்கு உரிமைகள் அளித்து, அவர்களை நம் எதிரிகளாகவும் செய்துவிட்டனர். இஃது இந்து சமயத்துக்கும் சமூகத்துக்கும் பெருங்கேடாய் முடிந்தது.

சுயராஜ்யம் வேண்டி நாம் போராடி நின்ற காலையில், அத்தீண்டாரதாரை ஆங்கிலேயர் சுட்டிக் காட்டி, நம்மை இலேசாகப் பேசி வந்தனர்; சுயராஜ்ய சித்திக்கு அவர்களைக்கொண்டு இடையூறும் பண்ணி வந்தனர். மகாத்துமா காந்தி அது கண்டு, தீண்டாதாரிடம் கருணை கொண்டு, அம்மாசினைப் போக்க முயன்று நின்றார். அச்சமயத்தில் தருமாத்துமாவான மாளவியாவும் அதற்குப் பேராதரவு அளித்து வந்தார்.

பண்டித மாளவியா வேத விதிப்படி நடப்பவர். அதனால், அவரை மகா வைதிகர் என்பர். ஆயினும், அவரோ, மனவிரிவு வாய்ந்தவர்; அன்புப் பெருக்கு மிகுந்தவர்; அருள் வெள்ளம் நிரம்பியவர். ஆகவே, தீண்டாதாரின் நிலைமை கண்டு, அவர் கசிந்து உருகினர்; கண்ணீர் மல்கினர்; கருணை நிறைந்த சொற்பொழிவு ஆற்றினர்.

“தீண்டாதாரின் இழிநிலையை எண்ண எண்ண, என் மனம் பதைக்கும்! இரு கண்களிலும் நீர் பெருகும்! எனது உடலமும் துடிக்கும்! இந்துக்களான அனைவரையும் தன் அகத்தே இந்து மகா சபை கொள்ளுதல் வேண்டும். தீண்டாதார் என்பாரும் இந்து சமயத்தைச் சேர்ந்தவர் அல்லரோ?

“அவர்களும் இராமபிரானையும், கிருஷ்ணனையும், ஏனைய நம் தெய்வங்களையும் தொழுபவர்

களே! அவர்களுட்பலர் நீராடியே உணவு கொள்ளுவர்; கடவுளை நினைந்தே காலம் கழிப்பர். கையில் காசு இருப்பின், அன்னர் கோயிலும் கட்டிக்கொள்வர். இந்து மதத்தைப் பின் பற்றி நடக்கும் தீண்டாதாளை நாம் இலேசாக நினைக்கலாமா?

"ஆலயங்களிலே ஆண்டவனை நாம் தரிசனம் செய்கையில் அவனும் வந்து தரிசனம் செய்யக் கூடாதா? நம்மிடமும் பாவம் என்பது இல்லையா? அந்நிலையில் ஆலயம் புகக்கூடாது என்று அவனைத் தடுக்க நமக்கு உரிமை உண்டோ? வேத சாஸ்திர வித்துவான்களே, எண்ணிப் பாருங்கள்!

"எனது இரு கரமும் கூப்பி உங்கள் அடிகளில் எனது முடி சாய்த்து உங்களை வேண்டிக் கொள்வேன்! நம் ஆலயங்களில் ஆண்டவனைக் கண்டு துதிக்க விரும்பும் தீண்டாதாரை நீங்கள் தடுக்கலாமோ? எல்லாம் வல்ல ஆண்டவன்மீது ஆணையிட்டு உங்களைக் கேட்டுக்கொள்வேன்! தீண்டாதார் மீது அன்பு காட்டுங்கள்! அருள் சொரியுங்கள்!

"கிறிஸ்தவரும் முகம்மதியரும் தமது மதத்தில் வந்து சேரும் வண்ணம் தீண்டாதாரை அன்பு காட்டி அழைக்கின்றனர்; காசு கொடுத்து இழுக்கின்றனர். இந்துக்களாய் இருக்கும் வரையில் அத்தீண்டாதாரை நாம் ஒதுக்கி வைக்கின்றோம். புறச் சமயத்தினராகிவிடின், அவர்களை அவ்விதம் நாம் இழிவு செய்வோமோ? ஒதுக்கி வைப்போமோ? உன்னிப் பாருங்கள்!

"தீண்டாதார் என நாம் எண்ணி நிற்போரே கலக சமயத்தில் முதன்முதல் ஓடி வந்து, நமக்குத்

தலை கொடுக்கின்றனர்; நம் ஆலயங்களைக் காக்க முற்படுகின்றனர் அல்லவா? அப்போது தீண்டா தாரென அவர்களின் உதவியை நாம் ஒதுக்கி வைக்கிறோமா? எல்லாவற்றையும் ஆராய்ந்து பாருங்கள்!

"ராஜா ரந்திதேவனது கதையின் படிப்பினை யாது? நாற்பத்து எட்டுநாள் அவ்வரசன் உண்ணா நோன்பு கொண்டிருந்தான்; அது தீர்ந்ததும், உணவு கொள்ள எண்ணினான். அச்சமயத்தில் பிராமணனொருவன் வந்து, பிச்சை வேண்டினான். உடனே தனது உண்டியில் ஒரு பங்கை உதவினான் அவ்வரசன்.

"பின்பு தீண்டாதார் இருவர் வந்து அவனிடம் ஐயம் புகுந்தனர். அவ்வளவில் அவன் அன்பு மிகுந்து, ஆதரவு காட்டி, எஞ்சிய உணவை அவர் களுக்கு அளித்துவிட்டான். தீண்டாதார் என்று அவன் நினைத்தானோ? விருந்தினர் என்றே அவர் களை மதித்தான்! தனது உணவை அளித்தான்! தான் பட்டினியாய் இருந்தான்! தண்ணீரையே அவன் கொள்ள நேர்ந்தது.

"உங்கள் வயற்காடுகளில் ஊழியம் புரியும் தீண்டாதான் ஒருவன் தாகவிடாய் மிஞ்சி உங்களி டம் வந்தால், நீங்கள் தண்ணீர் தாராமல் வாளா இருப்பீர்களோ? உங்களுக்கு ஊழியம் புரிய விரும்பி, அவன் உங்களது வீட்டிற்கு வருகின்றான். இதற்கு நீங்கள் இணங்குவது இல்லையோ? 'சுத்தமாய் இருக்கவேண்டும்; சத்தியமாய் நடக்க வேண்டும்,' என்று அவனுக்கு அறிவு ஊட்டுங்கள்; அவனை அணைத்து ஆதரியுங்கள்; அவனைக் கை தூக்கி உயர்த்துங்கள். உங்களுக்கு நலம் பல உண்டாகும்!"

இவ்வாறு அவர் மனங்கரைந்து மொழிந்தும் வைதிகருட்சிலர், அதற்கு மனம் ஒப்பவில்லை. 'ஈ எறும்புக்கும் துன்பம் நேரக்கூடாது,' என்று எண்ணுபவரே பண்டிதர். ஆதலின், வேதவிதிப்படி அத்தீண்டாதாருக்குக் கங்கைக் கரையில் மந்திர சத்தியினுல் தூய்மை உண்டாக்கி, 'இப்பொழுது அவர்களை ஒதுக்கி வைக்காமல் இருக்கலாமே,' என்றும் அவர் மொழிந்தார். 'யாரையும் மனம் நோவப் பண்ணுமல், சீர்திருத்தம் செய்யவேண்டும்,' என்பதே அவரது ஆசை. அவர் தருமாத்துமா அல்லவா? இராமானுசரைப்போலவே தீண்டாதாரை உயர்த்த முற்பட்டார் அப்பண்டிதர்.

# 14. பாரதீய விசுவ வித்தியாலயம்

'பெறுமவற்றுள் யாம்அறிவது இல்லை, அறிவுஅறிந்த மக்கட்பேறு அல்ல பிற.'

'அறிவு நிரம்பிய மக்கட்செல்வத்தைவிடச் சிறந்த செல்வம் வேறு இல்லை,' என்பதே இத்திருக்குறளின் கருத்தாம். அத்தகைய மக்கட்செல்வம் அனைவருக்கும் வாய்க்கவேண்டும் என்று ஆதிமுதல் பண்டித மாளவியா விரும்பி நின்றூர்.

ஆங்கில ஆட்சியின் காலத்திலே, இத்தேசத்தில் ஆங்காங்குக் கலாசாலைகள் பல உண்டு. சர்வ கலாசாலைகளும் சில இருந்தன. ஆண்டுதோறும் அவற்றினின்று படித்துக் கிளம்பும் இளைஞர் இலட்சக் கணக்கினர் என்ருலும், அன்னவருக்குக் கற்பிக்கப்படும் கல்வியோ, உயிரற்றது; தெய்வம், தேசம், தருமம் இவற்றிற் பற்று உண்டாக்கவில்லை.

"சர்வ கலாசாலைகளில் பட்டம் பெற்றுப் புறப்படும் இளைஞருக்கு அக்கல்வி அன்ருட வாழ்விணுக்

கும் உகந்ததாய் இல்லை; இக வாழ்விலுக்கும், பரவாழ்விலுக்கும் பயன் தருவதாகவும் இல்லை. ஆதலின், அக்கல்வியைக் கற்பதால் யாது பயன்?" என்று மாணவ வயதிலேயே பண்டிதருக்குத் தோன்றியது.

ஆதலின், அக்கல்வி முறையை மாற்றி, நமது பழமை புதுமை இரண்டையும் தழுவி, ஓர் உயர்ந்த கல்வி முறையை வகுத்து, இனிய போதம் புகட்டும் 'பாரதீய விசுவ வித்தியாலயம்' ஒன்று காணவேண்டு மென அவர் முடிவு கட்டினர்; அதற்கான உபாயங் களை எண்ணியெண்ணி, அவற்றைத் தம் தோழர் களுக்கு அறிவித்தார்.

பலரும் அது கேட்டு, 'இது நடக்கும் காரியமா? என்ன பித்து இது?' என்று உரைத்தனர். சிலரோ, 'பேரரசு ஒன்று பக்க பலம் தந்தால், இஃது எளிதில் நிறைவேறும். இஃது உம்மால் ஆகும் காரியமா?' என்றனர். வேறு சிலரோ, 'மூட வன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல உள்ளது உமது ஆவல்! பெருவள்ளலான கோடி சுவரன் மனம் வைத்தால் ஒரு சமயம் இது கை கூடலாம்,' என்று சொல்லினர்.

அந்நாளில் எவருக்கும் தன்னம்பிக்கை என் பது சிறிதும் இல்லை; 'நம்மால் என்ன ஆகும்?' என்னும் மனப்பாங்கே மிகுதி; அந்நிய அரசை அண்டிக்கிடக்கும் ஆர்வமே அதிகம்; 'காசைத் தேடிக் குவித்து, விரும்பிய இன்பம் நுகர்ந்து, வாழ்ந்து வருவோம்,' என்னும் கருத்தே மிகுதியாம்.

அத்தகைய காலத்திலே வித்தியாலயப் பித்து மிகுந்தார் பண்டித மாளவியா. 'முனைந்து முயன்றால் முன்னவனே முன்னின்று உதவுவான்,' என்பதில்

அவருக்கு நம்பிக்கை உண்டு. அது கண்டு, மாதவலால் என்னும் ஒருவர், "அன்பரே, நீர் முனைந்து முயல வேண்டும்! என்னால் இயன்றவரை யானும் உதவி வருவேன்," என்று கூறி ஊக்கம் ஊட்டினார். முயற்சி திருவினை ஆக்கும் அல்லவா?

வித்தியாலய நோக்கினுக்கு ஓர் உருவம் கொடுக்கக் கருதி, 1910-ஆம் ஆண்டிலே மாளவியா பல பெரியார்களைக் கூட்டி வைத்துப் பேசினார். பின்பு மற்றொரு கூட்டம் அவர் கூட்டிய பொழுது, காசி மகாராஜா அதற்குத் தலைமை தாங்கினார். அப்போது பேரறிஞர் பலர் வந்து, தமக்குத் தோன்றிய உபாயங்களை எல்லாம் உரைத்தனர்.

அடுத்த ஆண்டிலே அந்த விசுவ வித்தியாலயத்தின் கருத்தைத் தொகுத்தும் வகுத்தும் அவர் ஓர் அறிக்கை வெளியிட்டார். அந்த அறிக்கையின் முக்கிய சாரம் இது:

"பாரதீய விசுவ வித்தியாலயத்தில் நாநாவிதமான கலாசாலைகள் தோன்றும். வேதம், வேதாங்கம், சுருதி, ஸ்மிருதி முதலியவற்றை ஸம்ஸ்கிருதக் கலாசாலை கற்பித்து வரும்.

"ஆராய்ச்சிச் சாலைகள், மூலிகைத் தோட்டங்கள், மருத்துவ சாலைகள் முதலிய அங்கங்களைக் கொண்ட ஆயுர்வேத கலாசாலையில் மருத்துவ வகை அனைத்தும் கற்பிக்கப் பெறும். நவீன விஞ்ஞான சாஸ்திரங்கள் அனைத்தையும் அர்த்த சாஸ்திர கலாசாலை புகட்டும். பலவிதமான சாதனங்கள் வாய்ந்த வேளாண்மைக் கலாசாலை, பயிர்த்தொழிலின் நுட்பம் அனைத்தையும் கண்கூடாகக் காட்டிக் கற்பித்து வரும்.

"இசை, நாட்டியம், ஓவியம், சிற்பம் முதலிய கலைகளோ, கந்தர்வ கலாசாலையில் கவினுடன் புகட்டப்படும். 'சர்வ பாஷா கலாசாலை' என்பது அவசியமான அன்னிய பாஷைகள் அனைத்தையும் போதித்து வரும். இத்தகைய விசுவ வித்தியாலயம் ஆதிகால குருகுலத்தைப் போலக் குலவும்; பிரம சரிய ஆசிரமத்தையும் தன்னகத்தே தாங்கி நிற்கும்.

"மாணவன் ஒருவன் பன்னிரண்டு ஆண்டினுக்குள் வடமொழி, தாய்மொழி, ஆங்கிலம் என்னும் மொழிகளையும், தேச காவியங்களையும், வாழ்வுக்கு வழிகாட்டும் தொழிலையும் கற்றறிந்துகொள்ளலாம். அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றினையும் இளைஞர்நன்கு அறிதல் வேண்டும். குலக்கொழுந்துகளான சிறுவர் சிறுமியரே வருங்காலச் செல்வமாவர். அவர்களே சமூகத்தின் பொக்கிஷம். ஆதலின், அன்னார் தெய்வ பத்தராய், தேச ஊழியராய், சமயப்பற்று உள்ளவராய், சமூகத்தின் திலகங்களாய், அறிவுக் களஞ்சியமாய்த் திகழ்தல் வேண்டும். சிறுவர் சிறுமியரின் இயற்கை நலத்தினுக்கும், அறிவின் போக்கினுக்கும் உகந்ததான துறை ஒன்றில் நல்ல தேர்ச்சி செய்வித்தல் வேண்டும்!"

## 15. காசி இந்து பல்கலைக் கழகம்

மனிதருட்பலருக்குக் காசுப்பித்து, பதவிப் பித்து, பட்டப் பித்து என்னும் எத்தனையோ பித்துக்கள் உதிக்கும். பண்டித மாளவியாவிடம் தேசப் பித்து, சமயப் பித்து, தெய்வப் பித்து, தருமப் பித்து, கல்விப் பித்து முதலிய பித்துக்களே வளர்ந்தோங்கின. அந்தப் பித்துக்களின்

வடிவமே 'காசி இந்து பல்கலைக் கழகம்' அல்லது 'பாரதீய விசுவ வித்தியாலயம்' எனப்படும்.

'வீட்டைக் கட்டிப்பார்; கலியாணத்தைப் பண்ணிப்பார்,' என்று சொல்லுவார்கள். அப்போதுதான், அவற்றால் நேரும் பணச்செலவும், உண்டாகும் உடல் கஷ்டமும் தெள்ளிதின் புலப்படும். அப்பல்கலைக் கழகத்தை உருவாக்க வேண்டும் என்ற முனைப்பில் தமது வாழ்வையே மாளவியா அர்ப்பணம் செய்தார். இலட்சோப லட்சக்கணக்கில் அதற்குப் பணம் வேண்டும்.

அதுபற்றி அவர் இந்தியாவிலே இமயம் முதல் குமரி வரையில் ஊர் ஊராகச் சென்றார்; ஆங்காங்குள்ள மன்னர்களையும் வள்ளல்களையும் கண்டு பேசினார்; பெருவணிகரையும், பெருமக்களையும் பார்த்துத் தமது கருத்தை உணர்த்தினார்; தோட்டி முதல் தொண்டைமான் வரையில் அனைவரையும் அணுகி, வேண்டிக்கொண்டார்.

'எழுத்தறிவித்தல் இணையிலாத் தானம்,' என்பதை அவர் மூலம் எல்லாரும் கண்டுகொண்டனர். அவரது தூய மனம், பரந்த நோக்கம், விரிந்த ஞானம், வாக்கு நலம், முகத்தோற்றம் முதலியன எல்லாம் மக்களின் மனத்தைக் கவர்ந்தன. நம் புராண இதிகாசங்களிலே 'பிரமப் பிரயத்தனம், பகீரதப் பிரயத்தனம்' என்பன பேசப்படும். மாளவியாவின் பிரயத்தனமும் அவை போன்றதே. ஆதலின், தெய்வமும் கை கொடுத்தது.

அப்பல்கலைக் கழகத்தை எங்கே நிறுவுவது? பல்லாண்டு பல்லாண்டாகக் காசிமா நகரமே இந்துக்களின் புண்ணிய நகரம்; கல்வியின் இருப்பிடம்; புனித நகருமாம். ஆதலால், அந்நகரிலேயே

நிறுவுவதாக ஏற்பாடு ஆயிற்று. அங்கே அன்னி பேஸண்டு அம்மையார் நடத்தி வந்த கலாசாலை அதன் முதல் அங்கம் ஆயிற்று.

அந்நாளில் ஹார்டிஞ்சு பிரபு என்பவர், இந்தியாவிலே அரசப் பிரதிநிதியாய் இருந்தார். அவர் அப்பல்கலைக் கழகத்துக்கு ஆதரவாளராய் இருந்தார். ஆதலின், ஆங்கில அரசாங்கம் சட்டமொன்று செய்து, அப்பல்கலைக் கழக அமைப்பை ஒப்புக் கொண்டது. எதற்கும் அரசாங்கத்தின் ஆதரவும் அங்கீகாரமும் தேவை அல்லவா?

1917-ஆம் ஆண்டிலே காசிமா நகரில் அதன் கால்கோள் விழா நடக்கலாயிற்று. ஹார்டிஞ்சு பிரபு என்பாரே அவ்விழாவினுக்குத் தலைவராய் அமர்ந்தார். பாரத பூமியின் மன்னரும், பெரியார் பலரும் கூடியிருந்தனர். மகாத்துமா காந்தியும் மனம் உவந்து வந்திருந்தார். எல்லாரும் அதற்கு நல்லுரை வழங்கினர். அப்போது பண்டிதர் பேசியது இது:

"இப்பல்கலைக் கழகம் 'இந்து பல்கலைக் கழகம்' எனப்படும். இந்து மாணவரே இதில் சேர்ந்து படிக்கலாம். வடமொழியை ஒவ்வொரு மாணவனும் கட்டாயமாகக் கற்க வேண்டும். இப்பல்கலைக் கழகம் குறுகிய மதப்பற்றை ஊட்டாது; 'மனிதருக்கு மனிதர் சோதரர்,' என்னும் உண்மையையே ஊட்டும்; சமரஸத்தை ஏற்படுத்தும்; ஞானவொளியைப் பரப்பும்; ஞாலம் சிறக்கத் திகழும்!"

சுதேச மன்னருள் மிக்க தெய்வ பத்தரும் மிகுந்த அறிவுடையவருமான பழைய மைசூர் மகாராஜாவே அப்பல்கலைக் கழகத்தின் முதல் தலைவர். பண்டித மாளவியா உபதலைவர். பிற மன்னர்களும் பெருமக்களும் நிருவாக சபையின் அங்கத்தி

னார்கள். இவ்விதம் முதல் நிருவாக சபை அமைந்தது. ஆங்கில அரசாங்கமும் ஓர் அளவு பொருள் உதவி புரிந்தது.

இப்போது அவ்விசுவ வித்தியாலயத்தைச் சென்று பார்த்தால், ஒரு பெரிய நகரம் போலவே தோன்றும். வானை முட்டும் மாளிகைகள், வேலைப் பாடமைந்த மண்டபங்கள், அற்புதமான ஆராய்ச்சிச்சாலைகள், பேராசிரியர்களின் விடுதிகள், மாணவரின் விடுதிகள் முதலியனவெல்லாம் நமது மனத்தைக் கவரும்.

மாணவ மாணவிகளுக்கு உரிய விளையாட்டு மைதானங்களும், உல்லாசமான நந்தவனங்களும், உலாவி வர நீண்ட சாலைகளும் ஆகிய இவையெல்லாம் பல்கலைக் கழகத்தை அலங்கரிக்கும். அதனை 'அமுத கும்பம்' என்பர் சிலர். '**காமதேனு**' என்பர் சிலர். '**கலைமகளின் திருக்கோயில்**' என்பர் சிலர் அங்கே நாமகள் நடனம் புரிகின்றாள்.

அப்பல்கலைக் கழகத்தினுக்கு இன்றளவும் ஆன செலவு ஏறக்குறைய மூன்று கோடி ரூபாயாகும். இவ்வளவையும் பண்டிதரே வசூல் செய்தார்; அந்த ஆலயத்தையே தமது உயிராகக் கொண்டார்; குடும்பத்தை மூத்த மைந்தரிடம் ஒப்படைத்து அந்த ஆலய நிருவாகத்தையே கவனித்து வந்தார். உலக ஜோதியாய் அது துலங்க வேண்டும் என்றே அவர் பாடு பட்டு வந்தார்.

இப்போது பதினாயிரக் கணக்கான மாணவர்களும், மாணவிகளும் அந்த ஆலயத்தில் படித்து வருகின்றார்கள். அதுபோன்ற ஓர் ஆலயம் இந்தியாவிலே எங்கும் இல்லை என்று சொல்ல வேண்டும். எத்தகைய கல்வியும் அங்கே எளிதில் கிடைக்கும்.

அக்கழகத்தின் மாணவ மாணவியருக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு.

பழங்காலத்திலிருந்த குருகுலம் போலவே அதனை அமைத்த பண்டித மதன மோகன மாளவியாவின் முயற்சிக்கும் புகழுக்கும் கண் கண்ட அறிகுறி அவ்வித்தியாலயம்.

## 16. நிதியும் நேர்மையும்

'ஏற்பது இகழ்ச்சி,' என்றார் ஔவையார். பண்டித மதன மோகன மாளவியாவோ, 'ஏற்பது புகழ்ச்சி,' என்று கொண்டார். அது கண்டு மகாத்துமா காந்தியும் அதிசயித்தார். உடனே 'பிச்சைப் பிரபு' என்று அவருக்குப் பட்டம் சூட்டினர்.

தமக்கோ தம் குடும்பத்துக்கோ பிச்சை எடுத்தல் ஈனமாம். பர நலங்கருதிப் பிச்சை எடுத்தல் பெருமையே. ஆனாலும், அஃது எளிதன்று. காந்தி மகான், திலகர் சுயராஜ்ய நிதி என ஒரு கோடி ரூபாய் திரட்டினர். அப்போது தேசத்திலே சுயராஜ்ய தாகம் தலைமிஞ்சி நின்றது. பெரும்பாலும் ஏழைகளிடமிருந்தே அப்பணம் திரண்டது.

பண்டித மாளவியாவோ, ஆயிரம், பதினாயிரம், இலட்சம் என்று தமது வித்தியாலயத்துக்குப் பணம் சேர்த்தார். அப்பெருந்தொகையைத் தர வல்லவர் பணக்காரரே. அன்னவரிடமிருந்து பணம் வாங்குதல் எளிய செயல் அன்று. ஆனாலும், பணம் படைத்தாரிடமிருந்தே அவர் நிதி திரட்டினர்.

ஒரு சமயம் கல்கத்தா நகரிலே பண்டிதர் பணம் வேண்டி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர்.

சீமான்களும், ஜமீந்தார்களும், பெருமக்களும் அங்கே கூடியிருந்தார்கள். பண்டிதர் பேசி முடிந்ததும், சிலர் கட்டுக் கட்டாக நோட்டுக்களைத் தந்தனர். சிலர் முடிப்பு முடிப்பாகக் காசு கொடுத்தனர். சிலர் பதினுயிரக்கணக்கில் உண்டியல் கொடுத்தனர். சிலர் சவரன் சவரனுகச் சொரிந்தனர்.

அது சமயம், தொழில் துறையில் மகாமேதையான ஸர். விசுவேசுவரய்யாவும் அக்கூட்டத்தில் இருந்தார். அதிகாரிகள் பலரும் வீற்றிருந்தார்கள். பிரசங்கமாரிக்குப் பின் பொன்மாரி பொழிந்தது கண்டு, அவர்கள் வியப்பும் பிரமிப்பும் எய்தினுர்கள். பண்டிதரின் நோக்கும், போக்கும், உரையும், உள்ளமுமே பொன் மாரிக்குக் காரணம் என்பது அவர்களுக்குப் புலப்பட்டது.

‘இரண்டு கோடி வேண்டும்,’ என்று முதலில் அவர் மொழிந்தார்; பின்பு ‘மேலும் நான்குகோடி தேவை,’ என்ருர். அறுபத்து நான்கு கலைகளும் அங்கே ஒளி வீச வேண்டும் என்ருர். ‘தன்னந்தனியே நின்று, தன்னம்பிக்கை மிகுந்து, தெய்வ சகாயத்தை முன்னிட்டுத் தனி மனிதர் ஒருவர் கோடிக் கணக்கில் இந்த ஏழை இந்தியாவில் பணம் சேர்த்தல் அருமையினும் அருமை!’ என்று பேசாதார் இல்லை.

இருநிதி திரட்டிய பின்னர் யாது செய்தார் அவர்? சிற்ப வல்லுனர், யந்திர சாஸ்திர நிபுணர், தொழிலரசர், கல்விமான்கள், கண்ணியவான்கள், கருத்து ஒருமித்த தோழர் முதலிய பலரையும் வரவழைத்து வித்தியாலய அமைப்பைக் குறித்து ஆராய்ந்தார்; அரிய வேலைத்திட்டம் ஒன்று வகுத்

தார். பலர் வலுவில் வந்து பல உபாயங்களைக் கூற, அவற்றையும் அன்புடன் கேட்டறிந்தார்.

'மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.'

என்னும் குமரகுருபரரின் வாக்கினுக்கு அவரையே உதாரணமாகக்காட்ட வேண்டும். நம் முன்னோருட் பலர், கோயில் கட்டி, குளம் வெட்டி, சத்திரம் வைத்து, சாவடி சமைத்து, சாலை செய்து, சோலையும் வளர்த்தனர்; அதனால், புகழுடம்பு எய்தினர். வித்தியாலயம் அமைத்து நம் பண்டிதர் தமது புகழை நிலை நிறுத்திச் சென்றார்.

1930-ஆம் ஆண்டிலே நமது தேசத்தில் சுதந்தரப் போர் நடந்ததல்லவா? அக்கொந்தளிப்பிலே மலையும் கடலுங்கூடப் பட்டு உழன்றன. விசுவ வித்தியாலத்தையும் அக்கொந்தளிப்புத் தாக்கியது. பண்டித மாளவியா அப்போரிற்புகுந்து சிறைப் பட்டார். வித்தியாலய மாணவருட்பலரும் அப் போரில் ஈடுபாடு மிகுந்தனர்.

அது கண்டதும் ஆங்கில அரசாங்கம் அச்சம் ஊட்டியது; 'திரவிய சகாயத்தை நிறுத்திவிடுவேன்!' என்றது. அச்செங்கோல் சொற்கேட்டுப் பலரும் நடுங்கினர். ஆனாலும், பண்டிதரின் மன நலம் உன்னதம் கொண்டது. அதனால், வித்தியாலயம் வீறு குன்றாமல் துலங்கியது. அவ்விதம் அரசாங்கத்தினால் ஆபத்து நேர்ந்த போதெல்லாம் அதனைக் கட்டிக் காத்து வந்தார் பண்டிதர்.

# 17. கோடானுகோடியா?

முதலாவது உலகப் பெரும்போர் ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பதினுலாம் ஆண்டு மூண்டது. அது முதல் ஓர் ஐந்து வருஷ காலம் அது தொடர்ந்து நடந்துவந்தது. அப்போது இந்தியா சுயராஜ்யம் பெருமல், இங்கிலாந்துக்குக் கட்டுப் பட்டுக் கிடந்தது. ஆதலினுல், இந்தியாவின் வளத்தை எல்லாம், தான் விரும்பியபடி அது துய்த்து வந்தது.

அப்போரின் தொடக்கத்திலே இந்தியாவின் சேனையில் இலட்சம் வீரர் இருந்தனர். அத்தனை பெயரையும் போர் முனைக்கு வருமாறு இங்கிலாந்து ஆணையிட்டது. போரின் வேகத்தையும் பரப்பையும் கவனிக்கையில் அந்த ஆள் பலம் போதவில்லை. மேலும் படை திரட்டித் தரவேண்டும் என்று இங்கிலாந்து தாக்கீது தந்தது.

அவ்வாறே இங்குள்ள அதிகார வர்க்கத்தார் மேலும் ஏழு லட்சத்துத் தொண்ணூற்று ஓராயிரம் பேரைத் திரட்டி அனுப்பினுர்கள்; அப்பால் இன்னும் ஐந்து இலட்சம் பேரைச் சேர்த்துக் கொடுத்தார்கள். ஆகவே, மொத்தத்தில் பதினைந்து லட்சம் இந்தியர் போர்ச் சேவகம் புரிய நேர்ந்தது.

அவ்விதம் சென்ற நம் துருப்புக்கள் ஐரோப்பாவின் பற்பல போர் முனைகளிலும், இதர முனை முகங்களிலும் ஆங்கிலேயருக்குத் தலை கொடுத்தன. பிரான்ஸ் தேசத்தின் போர் முனையொன்றில் மிகவும் நெருக்கடி நேர்ந்த போது நம் வீரரின் உயிர்த்தியாகமே பிரான்ஸையும் இங்கிலாந்தையும் பேராபத்தினின்று காத்தது.

அந்தப் பதினைந்து லட்சம் பேருக்கும் உரிய சம்பளம், படிப்பணம், உபகரணம், உபகாரச் சம்பளம் ஆகிய இச்செலவுகள் எத்தனையோ இலட்சம் ஆகும். இச்செலவுகளை யார் பொறுப்பது? இந்தியாவா, இங்கிலாந்தா? இந்நிலையில் நன்கொடையாகவும் மிகத்திரண்ட பொருள் தரவேண்டும் என்று இங்கிலாந்து கேட்டது.

அதற்கு இங்குள்ள அதிகாரிகள் பத்துக் கோடிப் பவுன் நன்கொடை அளிக்கத் தீர்மானித்தார்கள். அவ்விஷயம் டில்லிச் சட்டசபையிலே ஆலோசனைக்கு வந்தது. அப்போது அச்சபையிலிருந்த இந்தியப் பிரதிநிதிகளுட்பலரும் வாய் மூடிக் கிடந்தனர்; அதிகாரிகளைத் தட்டிப் பேசத் துணியவில்லை.

பத்துக் கோடிப் பவுன் என்பது குருவியின் தலையில் பனங்காயை ஏற்றிவைப்பது போலாகும். அது சமயம் பண்டித மதன மோகன மாளவியா ஒருவரே எழுந்து, 'அப்பெருஞ்சுமையைத் தாங்க முடியாது!' என்று துணிந்து கூறினார். அவர் பேசியதன் கருத்து இது:

"அப்பணச்சுமை, ஏழை இந்தியாவினால் தாங்க முடியாததாகும். ஆண்டுதோறும் அறுபது லட்சம் பவுனுக்குப் புதிய வரி விதித்தால்தான் முப்பது ஆண்டிலே அக்கடனைத் தீர்க்க முடியும். ஏழை இந்தியா மிக்க வறுமைக்கு ஆளாகிக் கிடக்கின்றது. அதன் உயிர் நிலையை ஊட்டி வளர்க்க வகை இல்லை. இந்திய மக்களோ, எழுத்து வாசனையின்றி ஏங்குகிறார்கள். வேளாண்மையும் வர்த்தகமும் பெருகாமல் வரவரச் சிறுகியே போகின்றன. உண்ண உணவின்மையால் மக்களுட்பலர் ஊசலாடும் உயிருடன் உலாவுகின்றனர்."

பண்டிதர் ஒருவர் மட்டும் எதிர்த்துப் பேசி என்ன பயன்? உண்மையை எடுத்துக்காட்டி இடித்துரைத்தும் என்ன பயன்? நன்கொடையாக அத்தனை கோடியும் கொடுப்பதென்று முடிவு ஆகிவிட்டது. அத்துடன் இங்கிலாந்தின் பணப்பசி அடங்கவில்லை. மேலும் பண உதவி புரியவேண்டும் என்று 1918-ஆம் வருஷம் ஒரு தீர்மானம் கிளம்பியது.

போர்ச்செலவில் ஒரு பங்கை இந்தியா ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அதிகாரிகள் வாதாடினார்கள். அப்போதும் பண்டிதர் ஒருவரே, 'இஃது அடுக்குமா? ஏழை இந்தியா தாங்குமா? எவ்விதம் பணத்தைச் சேர்ப்பது? இந்தியா வாழ வேண்டாவா?' என்று கல் நெஞ்சமும் கரையும் வண்ணம் பேசினார்.

அதன்மேல், போர்முனை சென்ற துருப்புக்களின் செலவிலே ஒரு பகுதியை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று முடிந்தது. அவ்விதம் அதிகாரிகள் வரம்புமீறி, நீதிதவறி, ஆசை பிடித்து அலையும் போதெல்லாம் எள்ளளவும் தயங்காமல், கூசாமல், அழுத்தமாக வாதித்து வந்தவர் பண்டித மதன மோகனரே. எப்போதும் வாய்மையே பேசும் மாளவியாவின் வார்த்தை என்றால், அதிகாரிகளுக்கு உதறல் எடுக்கும்.

## 18. சுதேசியப் பற்று

தேசப்பற்று என்றால், தேசத்திற்கு உரிய நடையும் உடையும் வாழ்வும் கல்வியும் கொள்வதாம். அதனையே 'சுதேசியம்' அல்லது 'சுதர்மம்' என்பர் பெரியோர். தெய்வம், தேசம், தருமம் இம்மூன்றினிடமும் பிறவியிலேயே பெரும்பற்று உடையவர் பண்டித மாளவியா.

அன்னிய ஆட்சியும், நாகரிகமும் முன்னம் இங்கே தோன்றியவுடன் சுதர்ம சுதேசியத்தை நம்மவருட்பலரும் கைவிட்டனர்; பரதருமத்தில் பித்துக்கொண்டனர். பெரியோரிட்ட செல்வப் பெயரையும் சிலர் மாற்றிக்கொண்டனர்; வெள்ளைக் காரன் என்று தம்மைச் சிலர் எண்ண வேண்டும் எனவும் ஆசை கொண்டனர்.

அத்தகைய காலத்தில் பண்டித மாளவியா பிறந்தார். பிறந்த நாள் தொட்டு அவர் சுதர்ம சுதேசிய விரதமே பூண்டார்; முன்னோர் கொண்ட நடையுடையே மேற்கொண்டார். தமது சட்டைக்கு அவர் பொத்தானும் போடார்; பொத்தானுக்குப் பதிலாகக் கயிறு கொண்டே கட்டிக்கொள்வார்.

பிற நாட்டு உடையின் மோகத்தைப் போக்க வும், சொந்த நாட்டுச் சரக்கில் பற்று உண்டாக்க வும், 1881-ஆம் ஆண்டிலே அலகபாது நகரில் ஒரு வர்த்தக சாலை ஏற்பட்டது. நாட்டுச் சரக்குகள் பல வும் அச்சாலையில் நிரம்பி இருந்தன. அச்சாலையின் ஆதி கர்த்தாக்களுள் ஒருவர் பண்டித மதன மோகனர்.

1906-ஆம் ஆண்டிலே கல்கத்தாக்காங்கிரஸில் சுதேசியம், நாட்டுக் கல்வி, அன்னியப் பொருள் விலக்கு, சுயராஜ்யம் என்னும் நான்கும் தேசீய மந்திர வசனங்கள் ஆயின. பின்னர், அந்நான்கும் அரசியல் போரின் வீர வாசகங்களாகவும் வளர்ந் தோங்கின.

அவ்வசனம் கண்டு பண்டித மாளவியா முன்னையிலும் சுதேசியத்திலே ஊக்கம் மிகுந்தார்; நாடெங்கும் சுதேசிய வர்த்தக சாலைகள் தோன்ற வேண்டும் என்று அறிவுறுத்தினர்; சுயராஜ்யத்

துக்கு அச்சுதேசியமே அடிப்படை என்பதை எடுத்துக் காட்டினர். அம்மகாசபையில் சுதேசியத்தை ஆதரித்து அவர் பேசியது இது:

"வாழையடி வாழையாக நமது தேசத்தில் இருந்து வந்த கைதேர்ந்த நெசவாளர் எங்கே? பல வகையான தொழில்களை இயற்றும் பண்பாளர் எங்கே? முன்னம் ஆண்டுதோறும் இங்கிருந்து கப்பல் கப்பலாக நம் ஜவுளிகள் இங்கிலாந்துக்குப் போகுமே! இப்போதோ, அங்கிருந்து கப்பல் கப்பலாக ஜவுளிகள் வருகின்றனவே!

"எனக்கு முன்னே இச்சபையில் இருப்போர் அனைவரும் ஆங்கிலேயர் மயமாகத் தோன்றுகின்றனரே! எங்கே பார்த்தாலும் ஆங்கிலச் சரக்குகள்! பிற நாட்டுச் சரக்குகளில் மோகங் கொண்டதால் நமக்கு என்ன இலாபம்? அரை வயிற்றுக் கால் வயிற்றுக் கஞ்சிக்கும் திண்டாட்டம்! எங்கும் வாழ்வில்லாச் சங்கடம்!

"நாட்டுச் சரக்கின் விலை சற்றே அதிகமாய் இருந்தால் என்ன? அது நேர்த்தியாய் இராது போனாலும் என்ன? காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு அல்லவா? பிற நாட்டுச் சரக்குகளை வாங்குவதால் நமது தேசச் செல்வம் வறண்டு போகிறது; வறுமை பரவுகிறது; மரணம் பெருகுகிறது."

தீவிர சுதேசிய வாதி ஆதலால், எல்லாரும் நாட்டுச் சரக்கையே வாங்கவேண்டும் என்று வலியுறுத்த ஆண்டுதோறும் தொழில் மகாநாடு, வர்த்தக மகாநாடு இவை நடக்குமாறு அவர் ஏற்பாடு செய்தார்; தொழிற்காட்சிச்சாலைகள் ஆங்காங்கே அமைக்கவும் வகை தேடினர்; சுதேசிய மந்திரத்தை

எப்போதும் உச்சரித்துக்கொண்டே இருந்தார்; சில ஆலைகளும் ஏற்படுத்தினர்.

தொழில் துறையிலும், வர்த்தக வகையிலும், விஞ்ஞான சாஸ்திரத்திலும்மாணவருக்குத் தேர்ச்சியும், பயிற்சியும் ஊட்ட எண்ணியே காசி இந்து பல்கலைக் கழகத்தில் பலதிறக் கலாசாலைகளை அவர் அமைத்து வைத்தார். அக்கலாசாலைகளை அடுத்து அரிய ஆராய்ச்சிச் சாலைகளையும் அவர் ஏற்படுத்தியுள்ளார்.

தொழில் துறையில் நமது தேசம் முன்னேறும் வகை துறைகளை ஆராய்ந்து அறிவிக்க ஆங்கில அரசாங்கத்தார் 1916-ஆம் வருஷம், ஒரு பதின்மரை நியமித்தனர். அவர்களுள் நால்வரே இந்தியர். இரண்டு வருஷம் ஆலோசனை செய்து, அப்பதின்மரும் ஓர் அறிக்கை வெளியிட்டனர்.

அந்த அறிக்கை இந்தியாவின் தொழிலையும் வாணிபத்தையும் நன்கு வளர்க்கும் வகையைக் காட்டவில்லை. ஆதலின், அவர் அந்த அறிக்கைக்கு ஒரு மறுப்பு எழுதி வெளியிட்டார். அன்றளவும் இந்தியாவின் தொழில் வாணிப நிலையை அம்மறுப்புரையில் அவர் விளக்கி உரைத்தார்.

அச்சிறிய சபையில் அங்கம் வகித்த ஏனைய மூன்று இந்திய உறுப்பினரும், தொழிலரசர் அல்லது வர்த்தக வேந்தர். அவ்வாறிருந்தும் அம்மூவரும் ஆங்கிலேயரின் வாக்கே விழுமியதென்று கையொப்பம் செய்தனர். மாளவியாவின் மறுப்புரையோ, ஓர் அதிர்வேட்டுப்போல இருந்தது.

அரசாங்கம் அம்மறுப்புரை கண்டு திடுக்கிட்டது. மக்களோ, மனம் மிக மகிழ்ந்தார்கள். தேசத்

தில் உள்ள மொழிகளிலெல்லாம் அம்மறுப்புரை புத்தக வடிவில் வெளியாயிற்று. இலட்சோபலட்சம் மக்கள் அம்மறுப்புரையை வாசித்து, 'இது சிறப்புரையே!' என்று கொண்டாடினார்கள்.

இன்றும் அச்சிறப்புரை ஓர் இலக்கியமாகவே இருக்கும். 'தேசத்தைத் தழுவிய நாநா விதமான கூறுகளையெல்லாம் அவர் ஆராய்ந்து அறிந்தவர்; அரைகுறையாக எதனையும் சொல்லாதவர்,' என்பதற்கு அச்சிறப்புரை சான்று பகரும்.

## 19. அம்பலம் செய்தல்

விசாரணை ஏதும் இல்லாமல், எல்லா மக்களையும் பிடித்துச் சிறையில் இட 'ரௌலட்டுச் சட்டம்' என்பது ஏற்பட்டது. அச்சட்டத்தின் கடுமை கண்டே காந்தி மகான் 1919-ஆம் ஆண்டு சத்தியாக்கிரக இயக்கம் தொடங்கினர்.

அப்போது, 'அனைவரும் உண்ணா நோன்பு கொண்டு, கடவுளைத் தொழுது, வேலைகளையெல்லாம் நிறுத்தி, மாலையிலே பொதுக்கூட்டம் நடத்த வேண்டும்,' என்று மகாத்துமா காந்தி அறிக்கை விட்டார். அமைதியும் அஹிம்ஸையுமே அந்த இயக்கத்துக்கு அடிப்படைகளாம்.

அவ்வாறே தேசமெங்கும் நம் மக்கள், சத்தியாக்கிரக இயக்கத்தில் கலந்துகொண்டார்கள். பஞ்சாபு மாகாணத்திலுள்ள அமிர்தசரஸ் என்னும் நகர வாசிகளும், 1919-ஆம் வருஷம், ஏப்பிரல் மாதம், 13-ஆந்தேதி அங்குள்ள ஜாலியன்வாலா பாகு என்னும் தோட்டத்தில் கூடினார்கள். அந்த இடத்திற்குச் செல்ல ஒரே வழிதான் உண்டு.

அச்சமயம் அம்மாகாணக் கவர்னராய் இருந்தவர், ஸர் மைக்கேல் ஓட்வியர் என்பவர். அவருக்கு நம் மக்களின் எழுச்சி கண்டு, மனம் பதறியது; எல்லாரையும் அடக்கி ஆள வேண்டும் என்ற இறுமாப்பும் மிகுந்தது. அங்கிலேயில் ஜெனரல் டயர் என்பான் அத்தோட்டத்தின் வாயிலிலே தன் வீரரை வரிசையாக நிறுத்தி, அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான மக்களின்மீது முன் எச்சரிக்கை இல்லாமல் சுட ஆரம்பித்துவிட்டான். அதனால், நூற்றுக் கணக்கானபேர் மாண்டுபோயினர். இன்னும் பலர் குற்றுயிரும், குலை உயிருமாய்க் கிடந்தனர். மேலும் பலர், படுகாயம் அடைந்தனர். இவ்வளவும் அந்த ஜெனரல் டயர் செய்துவிட்டு, வாளா போய்விட்டான்.

இறந்தாரை எடுத்து அடக்கம் செய்யவோ, குற்றுயிராய்க் கிடப்பார்க்கு மருத்துவ உதவி தேடித்தரவோ, காயமடைந்தாரைக் கட்டுக் கட்டி ஆற்றவோ, அதிகாரிகள் வகை செய்யவில்லை. உற்றாரும் பெற்றாரும் ஊராரும் உரிய உதவிசெய்ய அவ்விடம் வந்தும், அவர்களையும் தடுத்துவிட்டார்கள்.

அப்பால் அம்மாகாணக் கவர்னர் எங்கும் இராணுவச் சட்டத்தை அமுலுக்குக் கொணர்ந்தார்; மக்களை எல்லாம் வாட்டி வதைத்தார். இரத்தம் கொதிக்கக் கூடிய அக்கொடுமையின் விவரங்களை இங்கே வரைவதற்கில்லை.

ஜாலியன் வாலாப் படுகொலையும் ஏனைய கொடுமைகளும் பிற மாகாணத்தாருக்குத் தெரியா வண்ணம் அக்கவர்னர் தடுத்துவிட்டார்; அம்மாகாணத்துக்குள் எவரும் நுழையக்கூடாது என்று

ஆணையிட்டார்; மாகாணத்தை விட்டு ஒருவரும் வெளியே போகக் கூடாது என்றும் உத்தரவு செய்தார். அதனால், பஞ்சாபிலே என்ன நடக்கிறது என்பது ஒருவருக்கும் புலப்படவில்லை.

ஆனாலும், பண்டித மதன மோகன மாளவியா அவற்றையெல்லாம் அறிந்துகொண்டார். டில்லிச் சட்டசபையின் ஏனைய அங்கத்தினர்கள் திகைத்துக் கிடந்தார்கள். அது சமயம் பஞ்சாபு படுகொலையைக் குறித்துச் சரமாரியாகத் தொண்ணூற்று ஒன்பது கேள்விகள் வரைந்து, அரசாங்கத்துக்கு அனுப்பினர். அவ்விதம் அரசாங்கத்துக்கு அனுப்பிய கேள்விகளைப் பத்திரிகைகளில் வெளியிட உரிமையுண்டு. ஆதலின், பத்திரிகைகள் எல்லாம் அக்கேள்விகளை அப்படியே வெளியிட்டன.

கேள்விகளின் போக்கிலிருந்து தாங்க முடியாத—சொல்ல ஒண்ணாத—கொடுமைகள் நடந்திருக்கவேண்டும் என்பதை உலகம் கண்டுகொண்டது. உடனே எங்கும் கூக்குரல் கிளம்பிற்று. இவ்வாறு எல்லாம் அம்பலமாகும் வண்ணம் கேள்வி கேட்ட பெருமைக்கு மாளவியாவே உரியவராவார்.

அவ்விஷயம் டில்லிச் சட்டசபையில் வாதத்துக்கு வந்த போது, பண்டித மாளவியா எழுந்து இரண்டு மணி நேரம் கல்லும் உருகப் பேசி, அனைவரையும் பிரமிக்கச் செய்தார். அவரது பேச்சின் தன்மையும் ஆழமும் கண்டு அதிகாரிகளுக்கு எல்லாம் ஒரே நடுக்கம் உண்டாயிற்று.

பாரத மக்களும் அத்துறையில் மாளவியாவின் ஊழியத்தை உணர்ந்து, 'திக்கற்றோரைக் காக்கும் தீர புருஷர், அதிகாரிகளின் அட்டகாசத்தை அம்பலமாக்கும் அசகாயசூரர்,' என்று அவரை உச்சி மீது கொண்டு கொண்டாடினர்கள்.

# 20. தேசிய தவம்

பஞ்சாபு படுகொலை, சுயராஜ்யப் பேறு இவை கருதியே மகாத்துமா காந்தி 1921-ஆம் வருஷம் ஒத்துழையாப் போர் தொடங்கினர். அப் போரிலே பல கூறுகள் உண்டு. பண்டித மாளவியா பிறப்பாலும் ஒழுக்கத்தாலும்வேதியரே ஆயினும், வேறு விதியின்றேல், போரில் புகப் பின் வாங்காதவர்.

ஒரு சமயம் காங்கிரஸ் மகாசபையில் அப்பண்டிதர் பேசிய பொழுது, "நான்கு வகை உபாயங்களில் முதல் மூன்றையும் கையாண்டு பார்ப்பேன்! கருதிய பலன் கிட்டவில்லையானல், வாளுருவி முனை முகத்தே குதிப்பேன்! முன் நின்று சேனையை நடத்துவேன்!" என்று கூறினர். அது கேட்டதும் அதிகாரிகள் உட்பட ஆங்கிருந்தார் அனைவரும் திடுக்கிட்டனர். எனவே, போர் என்பதில் அவருக்கு விருப்பு உண்டு. மகாத்துமா காந்தி வகுத்த ஒத்துழையாப் போரிலே ஒரு கூறு, சட்டசபைகளுக்குள் செல்லாதிருத்தல். இது பண்டிதருக்குப் பிடிக்கவில்லை.

சட்ட சபைகளுக்குள் காங்கிரஸ்காரர் போகாவிட்டால், அதிகார வர்க்கத்தின் கையாட்களும் சுயநலக்காரரும் அச்சபைக்குள் புகுந்து தேசத்தைக் கெடுத்துவிடுவர் என்பதே பண்டிதரின் உறுதி. அது கருதியும் போர் நடக்கையில் அதில் அக்கறையுள்ள ஒருவர் இருவர் வெளியே இருந்து வேண்டுவன செய்ய வேண்டும் என்று எண்ணியுமே அப் போரில் பண்டிதர் நேர் முகமான பங்கு கொள்ளவில்லை; ஆனாலும், வெளியே இருந்து அப்போரை நன்கு கவனித்து, ஆவன எல்லாம் செய்துவந்தார்.

போர்தொடங்கிய முதல் மூன்று ஆண்டிற்குள் ஏறக்குறைய ஓர் இலட்சம் பேர் சிறை புகுந்தனர். அவர்களைப்பாராட்டியும், அதிகாரிகளின் கொடுமைகளை அவ்வப்போது கண்டித்தும் பண்டித மாளவியா, தேசப் பத்திரிகைகளில் எழுதி வந்தார்; காங்கிரஸுக்கும் அரசாங்கத்துக்கும் இடையே நின்று இருவருக்கும் ஓர் உடன்பாடு உண்டு பண்ணவும் முயன்று வந்தார்; அரசப் பிரதிநிதியைக் கண்டு பேசும்பொழுது அச்சமும் கூச்சமும் இல்லாமல், தேசத்தின் நலத்தையே எடுத்துரைப்பார்.

போரில் கலந்துகொள்ளாமல் விலகி நிற்கும் பண்டிதரைத் தம் பக்கம் இழுத்துக்கொள்ள வேண்டும் என்று பன்முறை அரசாங்கம் ஆசை வலை வீசியும், பயன்படவில்லை. பெரிய பெரிய பட்டமும் பதவிகளும் தமது காலடியில் கிடந்த காலையில், தேசமே பெரிதென்று அவர் நினைத்து, அவற்றையெல்லாம் உதறித் தள்ளினர். அதுகண்டு அவரிடம் அதிகாரிகளுக்கு மதிப்பு மிகுதி என்பது ஒரு புறம் இருக்க, உள்ளூற அச்சமும் அதிகம் உண்டு.

ஒத்துழையாப் போரிலே காந்தி மகானும் சிறைப்பட்ட பின், போரின் கடுமையினல் தேசம் களைத்துப் போயிற்று. சுயநலக்காரர் எங்கும் சட்ட சபைகளிற்புகுந்து, அதிகாரிகள் சொன்னதே சரி என்று நடந்து வந்தார்கள். அப்போது சிறையினின்று வெளியே வந்த சித்தரஞ்சன தாஸரும், பண்டித மோதிலால் நேருவும் அப்போரின் முறையை மாற்றி, சுயராஜ்யக் கட்சி என்பதைத் தோற்றுவித்தனர். இதற்குப் பண்டித மாளவியா ஆசிகூறி, ஆதரவெல்லாம் அளித்தார்.

டில்லிச் சட்டசபையிலே அக்கட்சியார் ஆற்றிய வேலையும், இட்ட சண்டையும், கொஞ்சநஞ்சமல்ல. அதிகார வர்க்கம் அது கண்டு நடுக்கமே கொண்டு கிடந்தது. மாளவியாவும், லாலா லஜபதியும் அக்கட்சிக்குப் பக்கபலம் தந்தது இவ்வளவு அவ்வளவு அல்ல.

சுயராஜ்யக் கட்சி ஓங்கிநின்றபோதிலும் காங்கிரஸுடன் ஓர் உடன்பாடு கொள்ள அதிகார வர்க்கம் ஆசை கொண்டது. அப்போதும் பண்டித மாளவியாவையே நாடி நின்றது அவ்வர்க்கம். மகாத்துமா காந்தியின் போர் முறையில் அவருக்குக் கருத்து வேற்றுமை இருந்தாலும், சுயராஜ்யக் கட்சியின் போக்கிலே சிறிது மாறுபாடு கொண்டாலும், தேசத்தின் நலத்தை அவர் ஒருபோதும் விட்டுக் கொடுக்கவில்லை. 'மகாத்துமாவைவிட இப் பண்டிதர் பிடிவாதமாய் இருக்கிறரே!' என்று அவ்வர்க்கத்தார் பேதுற்றனர்.

முடிவில் சுயராஜ்யக் கட்சியின் முயற்சியும் பயன் தாராமல் போயிற்று. அதிகார வர்க்கத்தார் வழிக்குவரவில்லை. ஆதலினல், 1930-ஆம் ஆண்டில் மீண்டும் காங்கிரஸ் மகாசபை சுதந்தரப் போர் புரிய முனைந்தது. முனைந்த காலையில் பண்டித மாளவியா அதற்கு மிக்க ஆதரவு அளிக்கலானர்; தாமும் போரிலே பங்கு கொள்ள முன் வந்தார். அவர் குடும்பத்தாரும் அத்தேசீய தவத்தில் ஈடுபாடு மிகுந்தனர். தெய்வம், தேசம், தருமம் இவற்றில் அக்கறையுள்ளோர் அத்தவத்தை மேற்கொள்ளாமல் இருக்க முடியுமோ?

# 21. பண்டிதரின் பாய்ச்சல்

முன்னம் ஐக்கிய மாகாணம் என்று சொல்லப் பெற்று இப்போது உத்திரப் பிரதேசம் என வழங்கும் மாகாணத்தின் தலைநகரம் அலகபாது. அது பிரயாகை என்றும் வழங்கப்படும். அங்கே யமுனை, கங்கை ஆகிய இரு நதிகளும் கூடுகின்றன. சரஸ்வதி என்னும் நதியும் அவற்றுடன் வந்து கலக்கிறது என்பர்.

ஆதலின், திரிவேணி சங்கமம் என்றும் அதற்கு ஒரு பெயர் உண்டு. பன்னீராண்டுக்கு ஒரு முறை கும்பமேளா என்னும் பெருநாள் ஒன்று வரும். அப்போது இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் இலட்சக் கணக்கான மக்கள் சென்று அத்திரிவேணி சங்கமத்தில் நீராடுவார்கள். 1924-ஆம் வருஷம் அத்தகைய பெருநாள் வந்தது.

அன்று அச்சங்கமத்திலே வெள்ளம் மிக அதிகம்; நீரோட்டமும் மிக வேகம். அந்நிலையில் நீராடினால் மக்களுக்கு ஆபத்து நேரும் என்று அதிகாரிகள் கருதினார்கள்; ஆகவே, நீராடக்கூடாது என்று உத்தரவு இட்டு, நீராடும் துறைக்கு அருகே வேலியும் போட்டுத் தடுத்துவிட்டார்கள்.

சமயக் கடமையில் தலையிடக் கூடாது என்று பண்டித மாளவியா சொல்லிப் பார்த்தார். அதிகாரிகள் காது கொடுக்கவில்லை. உடனே ஆயிரக் கணக்கான மக்களுடன் அவ்விடம் சென்று, அவர் சத்தியாக்கிரகம் செய்யலானார். 'ஏதேனும் குழப்பம் விளையுமோ!' என்று கருதிக் குதிரைப் படையும், போலீஸ் படையும் அவ்வேலிக்கு முன்னே காவல் புரிந்து நின்றன.

தற்செயலாக அதனை அறிந்தார் பண்டித ஜவாஹர் லால்; உடனே வேடிக்கை பார்க்க எண்ணி அவ்விடம் சேர்ந்தார்; மாளவியாவுக்கு அருகே சுடுமணலில் உட்கார்ந்து, தாமும் சத்தியாக்கிரகம் பண்ணினர். உச்சிப் போதில் வெயில் மிகக் கடுமையாய் இருந்தது. ஜவாஹருக்குப் பசியும் தாகமும் உண்டாயின.

ஜவாஹர், சமயம் பார்த்து எழுந்து அவ்வேலியைத் தாண்டி, அப்பாற்குதித்து, நதியில் நீராடி வந்து, முன் போல மாளவியாவின் அருகே உட்கார்ந்துகொண்டார். இதற்கிடையில் மக்களின் மனநிலை கொந்தளிப்புக்கொண்டது. சூரிய வெப்பமும் தாங்க முடியாததாயிற்று.

காலை முதல் பிற்பகல் வரையில் அமைதியுடன் வீற்றிருந்த பண்டித மாளவியாவுக்குப் பதைப்பு உண்டாயிற்று. வீணே வீற்றிருந்து பயனில்லை என்று எண்ணித் திடீரென அவர் எழுந்தார். அவர் எழுந்ததும் ஜனக் கூட்டமும் எழுந்து நின்றது. குதிரை வீரரும் சுறுசுறுப்பாய் இங்குமங்கும் குதிரைகளைத் தட்டிவிட்டனர்.

எல்லாவற்றையும் பார்த்து நின்ற பண்டித ஜவாஹர் பரபரப்புக் கொண்டார்; 'மேலே யாது விளையுமோ!' என்று ஆவலுடன் எதிர் நோக்கி நின்ருர்; ஆயினும், அச்சமோ, திகிலோ அடையவில்லை. 'மாளவியா அருகே இருக்க நமக்கேன் கவலை?' என்பதே ஜவாஹரின் கருத்தாய் இருந்தது.

குதிரைவீரரைத் தொடர்ந்து போலீஸ் வீரரும் படாடோபமாக அவ்வேலியின் முன்னே ஆயுதங்களைத் தாங்கி வரிசையாய் நின்றனர். குணம்

என்னும் குன்றேறி நிற்பவர் பண்டித மாளவியா. ஆனாலும், வீரரின் அட்டகாசம் அவருக்கு வெறுப்பை ஊட்டியது. தமக்குப் பின்னே ஆயிரக் கணக்கான மக்கள் அமைதியின்றி நிற்பதும் அவர் மனத்தில் உறுத்தியது. 'சமயக் கடமையில் தவறுவதா!' என்ற சிந்தாகுலமும் ஓங்கியது.

அப்போது அவருக்கு வயது அறுபதுக்கு மேல் ஆகியிருந்தும், ஓர் இளைஞனைப் போலவே அவர் துள்ளி எழுந்தார். எதிரே குதிரை வீரரும், போலீஸ் வீரரும் அடுத்தடுத்து நின்றும், அவர் சிறிதும் அஞ்சவில்லை. அவர்களுக்கிடையே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தார்; வேலியைத் தாண்டி அப்பால் சென்றார். அவரைத் தொடர்ந்து அனைவரும் முன்னேற முனைந்தனர்.

குதிரை வீரருக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவர்கள் திகைத்து நின்றார்கள். அவர்கள் போட்டிருந்த வேலி என்னாயிற்று என்பதும் புலப்படவில்லை. அவர்கள் மரம்போல அசைவற்று நின்றுவிட்டார்கள். அனைவரும் தங்கு தடையின்றி அந் நீர்த்துறை சேர்ந்து, நீராடித் திரும்பினர்.

வேலியைத் தாண்டி அப்பால் குதித்த ஜவாஹர் மீதும் வீரரின் இடையே பாய்ந்த பண்டித மாளவியா மீதும் அரசாங்கம் வழக்குத் தொடுக்கும் என்று எல்லாரும் எதிர் பார்த்தனர். ஆயினும், பண்டித மாளவியாவுடன் வம்புக்குப் போக அரசாங்கம் மனத்துணிவு கொள்ளவில்லை. 'மாளவியாவின் பாய்ச்சலே பாய்ச்சல்!' என்று ஜவாஹர்லால் வியந்து பேசுவார்.

## 22. உதறித் தள்ளல்

உப்புச் சண்டை உதித்த காலத்திலே பண்டித மாளவியா டில்லிச் சட்டசபையில் ஓர் உறுப்பினராய் இருந்தார். அச்சண்டை காட்டுத் தீயே போலத் தேசமெங்கும் பரவிற்று. அதனை நோக்கவே அவரது மனம் துடித்தது. சட்டசபையில் வீற்றிருக்க அவருக்கு மனமில்லை. அதனை உதறித் தள்ளி வெளியே வந்தார். வருகையில் வாய் மூடி வரவில்லை. தமது கருத்தையும் அரசாங்கத்தின் போக்கையும் விளக்கி, அவர் அரசப் பிரதிநிதிக்கு ஒரு கடிதம் விடுத்தார். அக்கடித வாசகத்தின் சில பகுதிகளை மட்டும் இங்கே தருவோம்:

"அரசியலில் பலபல திருத்தங்கள் ஏற்பட்டும் என்ன பயன்? ஆங்கிலேயரின் நன்மைகளை மதித்து இந்தியாவைச் சுரண்டுதல் நிற்கவில்லையே!

"உயர்ந்த உத்தியோகங்களெல்லாம் ஆங்கிலேயருக்கே. சேனையில் உயர் பதவிகளிலே இந்தியரை நியமித்தல் இல்லை. இரயில்வேயிலும் அப்படித்தான். எல்லாம் ஆங்கிலேயரின் மாமன் காணியாய் இருத்தல் அழகோ! இந்தியாவின் கஷ்ட நஷ்டமோ, சொல்லி முடியா!

"வர்த்தகமோ, மிகவும் குறைவு! பிழைப்பில்லாத் திண்டாட்டமோ, மிகமிக அதிகம்! வரிச் சுமையோ, பொறுக்க முடியவில்லை! எனவே, சட்ட சபையில் நான் இருந்து என்ன பயன்? தீமைகளைத் தடுக்கமுடியவில்லையே! அரசியல் மாற வேண்டும். இதற்காக எனது காலம், உழைப்பு, முயற்சி, ஊக்கம் முதலிய அனைத்தையும் ஈடுபடுத்துவேன்!"

அவ்விதம் கடிதம் வரைந்து விடுத்து அவர் வெளியே வந்தார். உப்புச் சண்டையின் வடிவு கொண்ட சுதந்தரப் போரின் வேகத்தை அரசாங்கம் தாங்க முடியவில்லை. ஆதலின், இஷ்டப்படி சட்டங்கள் செய்து ஜனங்களை அடக்க அரசாங்கம் முயன்றது. அச்சமயம் அப்போரிலே பம்பாய் நகரமே முன்னணியில் நின்றது.

'மக்கள் கூட்டமாகச் சேரக்கூடாது; பொதுக் கூட்டங்களிலே பேசக் கூடாது; ஊர் வலமாகப் போகக்கூடாது; காங்கிரஸ் கொடிதாங்கி வெளியே வரக்கூடாது; காந்தி குல்லாய் தரிக்கக் கூடாது,' என்றெல்லாம் சட்டதிட்டங்கள் சீறி நின்றன.

அங்நிலை கண்டு பண்டித மாளவியா மனம் பதைத்தார். பம்பாயிலே ஊர் வலமாகச் செல்லும் மக்கள் அதிகாரிகளால் கொடுந்துன்பத்துக்கு ஆளாதல் கண்டு, கண்ணீர் வடித்தார்; உடனே அந்நகருக்கு விரைந்து சென்றார்; மிகப் பெரிய ஊர் வலம் நடத்த வகை செய்தார்; அதன் முன்னணியில் தாமே நின்றுகொண்டார். பண்டித மாளவியா முன்னின்று ஊர்வலத்தை நடத்துவார் என்று கேள்வியுற்றதும், பதினாயிரக் கணக்கான மக்கள், அந்த ஊர்வலத்தில் சேர்ந்துகொண்டனர். 'ஆடுமாடுகளை அடிப்பது போல நம்மையும் போலீஸார் அடிப்பரே!' என்று மக்கள் சிறிதும் சிந்தனை செய்யவில்லை.

ஊர் வலம் புறப்பட்டது. ஐம்பதாயிரத்துக்கு மேற்பட்ட மக்கள் அதில் கலந்துகொண்டார்கள். மாளவியாவே அந்த ஊர் வலத்தின் முதல் மனிதர். போலீஸார், துருப்புகளுடனும், தடி துப்பாக்கி

களுடனும் வந்து அந்த ஊர் வலத்தைத் தடுத்து நிறுத்தினர். தடியும் துப்பாக்கியும் கொண்டு தாண்டவம் ஆட அவர்களுக்குத் துணிவு வரவில்லை. மாளவியாவைக் கண்டதும் மரம்போல நின்றனர்.

அவரோ, நடுப்பாதையிலேயே உட்கார்ந்து கொண்டார். அவருக்கு எதிரே துருப்புகளும், போலீஸாரும் சுவர் போல நிற்கலானார்கள். மாளவியா கீழே உட்கார்ந்ததும் பதினாயிரக் கணக்கான மக்களும் தரையிலே அமர்ந்துவிட்டார்கள். மேலே சூரியன் காய்கின்றான். கீழே பூமி சுடுகின்றது.

பண்டித மாளவியா சிறிதும் அசையவில்லை. மக்களும் அமைதியாய் இருந்தார்கள். நாழிகை பல ஆகியும் பயன் என்ன? பண்டிதர் களைப்புக் கொள்ளவில்லை. துருப்புகளும் போலீஸாருமோ, வெயிலில் வாடி வதங்கினர்; 'எத்தனை நேரம் இவ் விதம் நிற்பது!' என்று தவித்தனர்; தருமாத்து மாவின் முன்னே தங்கள் கைவரிசையைக் காட்டவும் மனம் கொள்ளவில்லை.

அத்தகைய நிலையில் அவரை அதிகாரிகள் கைது செய்தார்கள். உடனே அனைவரும் அமைதியுடன் கலைந்து போகவேண்டும் என்று அவர் கூறினார். மக்கள் அவ்விதமே கலைந்து போனார்கள். அரசினர் அவர்மீது வழக்கு நடத்தி அவருக்குத் தண்டனை கொடுத்தனர். அதனை மலர்ந்த முகத்துடன் அவர் ஏற்றுக்கொண்டார்.

# 23. புண்ணிய யாத்திரை

உப்புச் சண்டை நடந்த காலத்திலே பம்பாய் நகரம் முன்னணியில் நின்றது. குருக்ஷேத்திரம் என்று அனைவரும் அந்நகரை அன்று கொண்டாடினர். பண்டித மாளவியாவும் அவ்வாறே மதித்து, புண்ணிய யாத்திரையாகப் புறப்பட்டு, அந்நகருக்கு வந்து அஞ்சலி செய்தார்.

அந்நாளில் பம்பாய் நகரிலே சீமைத்துணி மறியல் மும்முரமாய் நடந்தது. ஜவுளி வர்த்தகர் பலரும் தம் கடைகளை மூடிவிட்டனர். ஆனாலும், ஒரு வர்த்தகனோ, தனது தொழிலைக் கைவிடவில்லை. தனது கிடங்கிலிருந்த சீமைத்துணிகளை எடுத்து வர முயன்றான்.

அக்கிடங்கின் வாயிலிலே தொண்டர்கள் மறியல் செய்து நின்றார்கள். நின்றும் மோட்டார் வண்டியிலே துணி மூட்டைகளை அவ்வர்த்தகன் ஏற்றினான்; பின்பு அவ்வண்டியை வெளியே கொண்டு வரக் கருதினான். மோட்டார் ஓட்டியின் அருகே போலீஸ் சார்ஜண்டு ஒருவன் காவலாய் இருந்தான்.

கிடங்கைவிட்டு வெளியே வர வண்டி புறப்பட்டது. சாத்துவிக முறையில் அவ்வண்டியைத் தடுத்து நிறுத்தத் தொண்டர்கள் முயன்றும் முடியவில்லை. பாபு கணன் என்னும் இளந்தொண்டன் அவ்வண்டி வரும் வழியில் குறுக்கே படுத்துக்கொண்டான்.

போலீஸ் சார்ஜண்டோ, "பிள்ளாய், எழுந்திரு! அன்றேல், ஆபத்து விளையும்!" என்று எச்சரிக்கை செய்தான். தொண்டருட்சிலர்,

"அன்ப, வண்டி வரும் வழியில் குறுக்கே படுத்துக் கொள்வதனால் உன் ஆருயிருக்கு அனர்த்தம் நிகழும்!" என்று அஞ்சிக் கூறினர்.

அத்தொண்டன் எதற்கும் அசையவில்லை. அவனது மனமும் தளரவில்லை. 'உயிர் போயினும் அக்கறையில்லை!' என்றே அவன் துணிவு கொண்டு கூறினான். மோட்டார் வண்டி நகரத் தொடங்கிற்று. அருகே இருந்தாருட்பலரும் முன் சென்று, அவ்வாலிபனை வாரியெடுத்து அகற்றக் கருதினர். அதற்கு அவன் ஒப்பவில்லை.

எல்லாரும் அது கண்டு அதிசயித்தனர். 'யாது விளையுமோ!' என்று சிலர் ஏங்கினர். மோட்டார் ஓட்டி தனது வண்டியைச் செலுத்தான் என்று வேறு சிலர் நினைத்தனர். சார்ஜண்டு அருகே இருக்கையில், பாபு கணனது ஆவி அகலாது என்று இரண்டொருவர் எண்ணியிருந்தனர்.

வண்டியோ, அவ்வாலிபனை மிக நெருங்கி விட்டது. கணப்பொழுதில் அஃது அவன்மீது ஏறி விடும்; உடனே உயிரும் போய்விடும் என்று பலரும் பதைத்தனர். அவனோ, 'அன்னை பாரதியே! வருவது வருக! உனது பாதமே எனக்குத் துணை!' என்று நினைத்தான்.

பல சொல்லிப் பயன் என்ன? மோட்டார் வண்டி அவன் மீது ஏறி, அப்பால் போய் விட்டது. அக்கணமே அவனது ஆருயிரும் பறந்து போய்விட்டது. அங்ஙனம் அமைதியுடன் உயிரை வழங்கிய உத்தமனை மனக்கோயிலில் இருத்தி ஏத்தித் தொழாத மாந்தர் இருப்பரோ?

அச்செய்தி இந்தியா எங்கும் பறந்தது. அனை வரும் அதுகேட்டுத் துடித்தனர்; வியந்தனர்; போற்

றினர்; புகழ்ந்தனர். அவன் உற்ருர் பெற்ருர் மனம் கரைந்தனர்; ஆயினும், 'சிபிச் சக்கரவர்த்தியினும் சிறந்துவிட்டான்!' என்று உவகை மிகுந்தனர்.

பிரயாகை நகரிலிருந்த பண்டித மாளவியா அது கேட்டார்; பதைபதைத்தார்; அவனைப் போற்றினர்; அவன் தியாகம் புரிந்த இடம் குரு க்ஷேத்திரமே என்று கருதினர்; ஆனந்தக் கண்ணீரும் அழுகைக் கண்ணீரும் வடித்துப் புண்ணிய யாத்திரை என்று பம்பாய்க்குப் புறப்பட்டார்.

இரயிலடியிலே வந்து இறங்கியதும் பண்டிதர் நேரே அவன் உயிர் விடுத்த இடம் சேர்ந்தார். அவருடன் ஆயிரக் கணக்கான மக்கள் போனர்கள். அந்த இடம் சேர்ந்ததும் அதனை அவர் தரிசித்தார்; கையெடுத்துக் கும்பிட்டார்; 'அவனே தியாக வீரன்!' என்று விளம்பினர்.

'முன்னம் ஒரு புருவைக் காக்க, சிபிச் சக்கரவர்த்தி தனது சதையை அரிந்து அரிந்து கொடுத்தும் எடை சரியாகாமையால், தானே துலைக் கோலில் ஏறினன். அதனை மெய்ப்பிக்கவே இப்பாலன் உயிர் துறந்தான்!' என்று பண்டிதர் பேசினர். 'அவனது பூதவுடல் மறைந்தாலும், புகழுடல் நிலை நிற்கும்!' என்று அறிவுறுத்தினர். தியாகியே தியாகத்தின் வலிமையை நன்கு உணர முடியும்.

# 24. அரசின் நடுக்கம்

நமது சுதந்தரப் போரில் ஒரு கூறு உப்புச் சண்டை. அச்சண்டை 1930-ஆம் ஆண்டு தொடங்கி நெடுக நடந்து வந்தது. அப்போது, 'காங்கிரஸ் மகாசபை, அதன் பல கிளைகள் ஆகிய எல்லாம் சட்ட விரோதமானவை,' என்று அரசாங்கம் ஆணையிட்டது.

ஆனாலும், காங்கிரஸ்காரர் பயந்து போய்விடவில்லை; ஆண்டுதோறும் நடத்தும் மகாசபையை நடத்தியே வந்தனர். 1933-ஆம் வருஷம், ஏப்பிரல் மாதம், 1-ஆந் தேதி அச்சபை கல்கத்தாவிலே கூடும் என்று காங்கிரஸ்காரர் ஓர் அறிக்கை விட்டனர்.

அச்சபையில் கலந்துகொள்ளுவதற்காக இந்தியாவின் பற்பல பாகங்களிலிருந்தும் பிரதிநிதிகள் புறப்பட்டார்கள். உடனே, 'கல்கத்தாவுக்குப் போகும் காங்கிரஸ்காரருக்கு டிக்கட்டுக் கொடுக்க வேண்டா,' என்று இரயில்வே கம்பெனிகளுக்கு அதிகாரிகள் உத்தரவு இட்டார்கள்.

கல்கத்தா போக விரும்பும் காங்கிரஸ்காரர், நேரே கல்கத்தாவுக்கு டிக்கட்டு வாங்காமல், இடை நடுவேயுள்ள ஓர் இரயிலடிக்கே டிக்கட்டு வாங்குவர். பின்பு அங்கிருந்து வேறோர் இரயிலடிக்கு டிக்கட்டு வாங்குவது வழக்கம். இவ்விதமெல்லாம் தந்திரம் செய்து அவர்கள் கல்கத்தா போய்ச் சேருவார்கள்.

அந்நகரிலே காங்கிரஸ்காரருக்கு யாரும் உணவு தரக்கூடாது. தங்கியிருக்க இடமும் கொடுக்கக் கூடாது என்று அதிகாரிகள் உத்தரவு செய்தி

ருந்தார்கள். அத்தகைய நிலையில் நாநா திக்கிலிருந்தும் கல்கத்தாவுக்குப் புறப்பட்ட பிரதிநிதிகள் இரண்டாயிரத்து ஐந்நூறு பேர் ஆவர்.

ஒவ்வோர் இரயிலடியிலும் கண் குத்திப் பாம்பு போல இரகசியப் போலீஸார் துப்பறிந்து நின்றும், ஆயிரத்து ஐந்நூறுபேர் கல்கத்தா போய்ச் சேர்ந்தனர். அத்தனை பேருக்கும் அங்கே உணவு வசதியும், இட வசதியும் எப்படியோ கிடைத்தன.

முன்னமே குறித்த வண்ணம் 1933-ஆம் வருஷம், ஏப்பிரல் மாதம், 1-ஆந் தேதி மாலை மூன்று மணிக்கு அம்மகாசபை கூடியது. அதில் பண்டித மதன மோகன மாளவியா தலைமை தாங்க வேண்டும். ஆனாலும், வழி நடுவில் அதிகாரிகள் அவரை மறித்து நிறுத்திவிட்டார்கள். ஆதலின், திருமதி சென் குப்தா தலைமை தாங்கினர். சுமார் மூந்நூறு பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். ஏழு தீர்மானங்கள் நிறைவேறின. அக்கிராசனரின் சொற்பொழிவும் பிரதிநிதிகளின் பேச்சும் முறைப்படி நடந்தன.

கல்கத்தா நகரிலே கூட்டம் எதுவும் நடத்தல் ஆகாது என்று உத்தரவு இருந்தும் என்ன பயன்? அச்சபைக்கு யாரும் போகக் கூடாது என்று எத்தனையோ தடைகள் விதித்தும் என்ன பயன்? 'காங்கிரஸ்காரர் எந்த இரயிலில் வருகின்றனர்? எங்கே தங்குகின்றனர்? எந்த இடத்தில் உணவு கொள்கின்றனர்?' என்று போலீஸ் ஒற்றர் ஊடுருவி நோக்கி நின்றும் என்ன பயன்?

காங்கிரஸ் மகா சபையோ, கூடிவிட்டது. அதிகாரிகள் அது கண்டு கோபம் கொண்டார்கள்; கையிலே தடிகள் தாங்கிச் சென்று, அப்பிரதிநிதிகளை நையப் புடைத்தார்கள். பலருக்கும்

காயங்கள் உண்டாயின. ஒருவரை அடிமேல் அடி அடித்தனர்; காலால் உதைத்தனர். அவருக்கு ஒரு கண் ஊனம் ஆயிற்று.

ஐக்கிய மாகாணத்திலிருந்து வந்த எண்பத் தொன்பது பிரதிநிதிகளை இரயிலடியிலேயே அதிகாரிகள் வழி மறித்து, போலீஸ் ஸ்டேஷனுக்கு இட்டுக்கொண்டு போய் அங்கே பலமாக அடித்தனர். சிலருக்கு இரத்தக்காயம் உண்டாயிற்று. சிலருக்கு விலா எலும்பு முரிந்தது. சிலர் அடி தாங்க மாட்டாமல் மூர்ச்சை அடைந்தனர்.

கல்கத்தா நகரிலுள்ள எல்லாப் போலீஸ் ஸ்டேஷன்களிலும் அவ்வண்ணமே கொடுமைகள் நடந்தன. அவை அனைத்தையும் பண்டித மாளவியா அறிய வந்தார். உடனே, அடிபட்டவர்களையெல்லாம் நேரில் கண்டு பேசி, நடந்தனவெல்லாம் உணர்ந்துகொண்டார்; 'தேவர்களை அசுரர் துன்புறுத்திய கதை போல இருக்கிறதே!' என்று கண்ணீர் வடித்தார்; பின்பு அக்கொடுமைகளை எல்லாம் தொகுத்தும் வகுத்தும் பத்திரிகைளுக்கு எழுதினர்.

வெளிநாட்டுப் பத்திரிகைகளிலும் அச்செய்தி வெளி வந்தது. பண்டித மாளவியா மெய்ம்மையே பேசும் மகான் என்பதை உலகம் அறியும். உலகோரின் முன்னிலையிலே இங்கிலாந்து ஏச்சுக்கு இடமாயிற்று. அதுபற்றி இங்கிலாந்திலே காமன்ஸ் சபையில் கேள்வி பிறந்தது. பொய்யான தகவலை மாளவியா வெளியிட்டார் என்று அப்போது இந்தியா மந்திரியாய் இருந்த ஸர் சாமுவேல் ஹோர் என்பவர் பதில் சொன்னர். 'அப்படியானல், பொய் புகன்றவர்மீது ஏன் நடவடிக்கை எடுக்ககூடாது?' என்று ஓர் உறுப்பினர் கேட்டார். மற்றோர்

உறுப்பினரோ, 'மாளவியா மெய்யே பேசும் பெரு மனிதர் அல்லவா?' என்று வினவினர். 'முழுதும் பொய்யான தகவலே மாளவியா வெளியிட்டது மிகவும் வருந்தத் தக்கது!' என்று அம்மந்திரியார் மீண்டும் பதில் கூறினர்.

அதன்மேல் அந்த மந்திரியாருக்கு மாளவியா கொடுத்த தந்தியின் வாசகம் இது: "கல்கத்தாவிலே காங்கிரஸ் பிரதிநிதிகளை அதிகாரிகள் அடித்ததுபற்றி அரசாங்கம் விசாரணை நடத்தட்டும். அவ்வளவையும் என்னல் மெய்ப்பிக்க முடியும். அவ்விதம் விசாரணை நடத்தாமற்போனல், என்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். அதனை நான் வரவேற்பேன்!"

பண்டித மதனமோகன மாளவியா அவ்விதம் தந்தி கொடுத்தும் என்ன பயன்? இந்தியா மந்திரியாருக்குத் துணிவு பிறக்கவில்லை. ஆதலின், விசாரணையும் நடத்தவில்லை; அவர்மீது நடவடிக்கையும் எடுக்கவில்லை. வங்காளக் கவர்ன்மெண்டாரும் வாய் மூடிக் கிடந்தனர். வழக்குத் தொடர்ந்தால், குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொண்டது போலாகும் அல்லவா?

## 25. சிறையும் சிந்தையும்

உப்புப் போரிலே பற்பல விதத்திலும் மாளவியா பங்கு கொண்டார். அது கண்டு பலருக்கும் ஆச்சரியமே விளைந்தது. அப்போரிலே அவர் ஒரு சமயம் சிறைப்பட்டார். அன்றளவும் அவர் சிறை வாசத்தைச் சுவைத்தது இல்லை. நாள் தோறும் காலை மாலைகளில் உரிய கடன்களை முடித்து, வேதவிதிப்படி நடந்து வருபவர் அவர்.

அங்கிலேயிலும் அவர் சிறிதும் தயங்காமல் மலர்ந்த முகத்துடன் சிறைக்குள் புகுந்தார். 'பரம வைதிகரும் மிக்க ஆசாரசீலருமான பண்டிதருக்குமா சிறை வாசம்?' என்று பதறாதார் ஒருவரும் இலர். சிறையிலே தமது காலை மாலைக் கடன்களைக் கைவிடாமலும் சிறை விதிகளை மீருமலும் அவர் நடந்து வந்தார்.

மதில் இடிந்தால் கட்டலாம்; மனம் இடிந்தால் கட்ட முடியாது. 'ஆங்கில அரசாங்கம் இவ்வளவு மோசமாக நடக்கிறதே!' என்றுதான் அவர் மனம் வருந்தினர். அவருக்கு நோய் கண்டது. அது காரணமாக வெளியே வர அவர் விரும்பவில்லை. படிதாண்டாப் பாவையரும் சிறை புகுந்தது கண்டு அவர் பெரிதும் வியந்து போற்றினர்.

அப்போது அவருக்கு வயது எழுபது இருக்கும். விடுதலை அடைந்த பின்னும் மனநோயும் உடல் நோயும் அவரை விடவில்லை. அதனால், அவரது யாக்கை மெலிந்து, வலியில் மிகவும் குன்றியிருந்தது. அவ்வேளை இலண்டன் மாநகரில் இந்திய அரசியலை வகுக்க நடைபெற்ற வட்டமேஜை மகாநாட்டினுக்கு அவரையும் அரசாங்கத்தார் அழைத்தனர். அவரும் அதற்கு இசைந்தார்.

'அரசியலை வகுக்கும் பொழுது இந்து மக்களின் நலபலன்களுக்குக் காப்பு வேண்டும்; இந்து சமயத்தின் உயர்வினுக்கும் ஊறு நேரக்கூடாது,' என்று கருதி, அவர் சீமைக்குப் பயணமானர். இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் உள்ள தூரம் ஆறுயிரம் மைல். அந்நாளில் பெரும்பாலும் கப்பலிலேயே போக வேண்டும். கப்பற்பிரயாணத்திலே காலை மாலைக் கடன்களைக் கழிக்க அவ்வளவு வசதி

இராது. ஆனாலும், பண்டித மாளவியா சீமைக்குப் புறப்பட்டார். 'தள்ளாத இந்த வயதிலா கப்பல் பிரயாணம் செய்வது? இந்த உடலம் தாங்குமா? சிறை வாசத்திலேயே உடம்பு மெலிந்துவிட்டதே! கப்பல் பிரயாணத்தினால் யாது நேருமோ!' என்று சிலர் அஞ்சினர்.

அதற்கு மாளவியா, "தேச சேவைக்காகவே யான் இந்த உடலம் எடுத்தேன். அச்சேவை செய்கையில் இந்த யாக்கை இங்கே மடிந்தால் என்ன, இங்கிலாந்தில் விழுந்தால் என்ன? தேச சேவையே எனக்குப் பெரிது," என்று கூறினார்.

இங்கிலாந்துக்குப் போன போது வேண்டுமளவு கங்கையின் நீரை எடுத்துச் சென்றார்; கால் கழுவ மண்ணும் கொண்டு போனார். கப்பற் பிரயாணத்திலும், இலண்டன் நகரவாசத்திலும் அவர் அன்றாடம் இரண்டு வேளை நீராடுவதில் தவறவில்லை; காலை மாலைக் கடன்களிலும் குறையவில்லை. பசுவின் பால், சுத்தமான பழம் இவற்றையே பெரும்பாலும் ஆகாரமாகக் கொண்டார்.

இந்தியாவிலும் வெளியிடங்களுக்கு அவர் செல்லுங்காலையில் தம் சமையற்காரனை உடன் கூட்டிச்செல்வார்; அல்லது தாமாகவே சமையல் செய்து சாப்பிடுவார். எனவே, சீமையில் அவர் எவ்விதம் உணவு கொண்டிருப்பார் என்று நாம் விரித்துரைக்க வேண்டுமோ? 1932-ஆம் ஆண்டு இங்கு அவர் வந்து சேர்ந்தார். உடனே தேசீயத் தவம் புரிய வேண்டும் என்று ஓர் அறிக்கை வெளியிட்டார்.

அந்த அறிக்கையில், "அன்பு மிக்க சோதர சோதரிகளே, ஆங்கில அரசாங்கம் அடக்குமுறை

யில் இறங்கியுள்ளது. அஃது எங்குப் போய் முடியும் என்பது இப்போது சொல்வதற்கில்லை. நம் சோதர சோதரிகளிலே பல்லாயிரம் பேர் சிறைக்குள் கிடக்கின்றனர். காந்தி மகானே, எரவாடாச் சிறையிலே காவலில் இருக்கிறார்.

"சுதந்தரம் எய்தவேண்டுமென நாம் அனைவரும் விரும்பி நிற்கிறோம். அதற்காக நாம் தவம் புரிய வேண்டும். பெருந்தவம் புரிய நம்மால் இயலாதாயினும், சுயராஜ்ய சுதந்தரம் எய்தும் வரையில் வீணே ஒரு தம்படியும் நாம் செலவு செய்யக் கூடாது. ஏதேனும் வாங்கவேண்டுமானால், சுதேசிச் சாமான்களையே வாங்குதல் வேண்டும். இச்சிறிய தவமேனும் நாம் செய்ய வேண்டாவா?" என்று தெரிவித்தார்.

இவ்விதம் அவர் அறிக்கை விடுத்து அதிகாரிகளின் போக்கையும் அவ்வப்போது கண்டித்து, அப்போரில் ஈடுபட்டுள்ள மக்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டி, அவசியம் நேர்ந்த போது போர் முனைக்கும் பறந்து செல்லலானார்.

## 26. தங்கக் கொள்ளை

சவரன் அல்லது 'பவுன்' என்பது முன்பு பன்னிரண்டு அல்லது பதினைந்து ரூபாய் மதிப்புடையதாய் இருந்தது. 1919-ஆம் ஆண்டிலே அது பத்து ரூபாய்க்கு வந்துவிடும் என்று அதிகார வர்க்கம் உரைத்தது. அதனால், நம்மவர் தம்மிடமுள்ள சவரன்களையெல்லாம் விற்கத் தொடங்கினர். ஆயினும், அப்பால் பத்துரூபாய்க்குப் பவுன் கிடையாது போயிற்று.

அதனால் மக்கள் மிகவும் வருந்தினார்கள். முதல் ஐரோப்பியப் பெரும்போர் முடிந்தபின்னர், அளவு கடந்த செலவினாலும், கணக்கற்ற மரணத்தினாலும் உலகிலே தேசங்களெல்லாம் திண்டாடின. பின்பு அப்போரினால் பாழ்பட்ட தேசங்களை மீண்டும் சீராக்க முயன்றபோது உலகெங்கும் மிக்க செல்வ நெருக்கடி தோன்றியது.

1930-ஆம் ஆண்டினுக்குப் பின் அமெரிக்கா, பிரான்ஸ், இங்கிலாந்து என்னும் தேசங்கள் தங்கத்தை ஏராளமாக வாங்கிக் குவித்து வந்தன. தங்கத்தின் விலையோ இருபது, முப்பது, நாற்பது ரூபாய்க்கு ஏறியது. அச்செல்வ நெருக்கடி ஏழை இந்தியாவுக்குப் புதிது அன்று. இந்தியா எப்போதும் வறுமையால் வாடும் தேசம் அல்லவா?

ஆதலினால், ஏழை விவசாயிகள் நிலவரி கட்ட வகையில்லாமல் தவித்தார்கள். விலை வாசிகள் ஏறி வந்தமையால், வாழ்வின் செலவு அதிகமாயிற்று. இங்கிலையில் தங்கத்தின் விலை ஏறியிருப்பதைக் கண்டு நம் ஏழை மக்கள் தங்களிடமுள்ள நகை நட்டுகளையும் தாலிச்சரட்டையும் விற்கத் தொடங்கினார்கள்.

நம் ஏழை மக்களுக்கு உள்ள சொத்து ஒரு சிறிய தங்க நகை, அல்லது ஒரு வெள்ளிப் பாத்திரம், அல்லது ஒரு செப்புக்குடம் ஆகிய இவைகளே. இவற்றையும் விற்றுவிட்டால், அவர்கள் கதி என்ன ஆகும்? இது கண்டு செல்வர் தேம்பினர். பெரிய வர்த்தகர் சிலரோ, தமது இலாபம் ஒன்றையே கருதி, ஏழைகளின் தங்கத்தை விலைக்கு வாங்கி, மேனாடுகளுக்கு அனுப்பி வந்தனர்.

அவ்விதம் நமது தேசத்தை விட்டு ஏழை மக்களிடமிருந்து பறிபோன தங்கத்தின் மதிப்பு எத்

தனையோ கோடியாகும். செழிப்பான மேனாடு களின் பண நெருக்கடியை நேரில் கண்டு கலங்கிய பண்டித மாளவியா, அங்கிருந்து இங்கு வந்ததும் இங்கே நடக்கும் தங்கக் கொள்கையைக் கண்டு இரத்தக் கண்ணீர் வடித்தார்.

உடனே நம் மக்களுக்கு அவர் விடுத்த செய்தி பின் வருமாறு: "மக்காள், என் இனிய மக்காள், நாள்தோறும் ஏராளமான தங்கம் நமது தேசத்தை விட்டுப் போகின்றது. இந்நிலை கண்டு என்னால் சிறிதும் சகிக்க முடியவில்லை! இவ்விதம் போகும் தங்கம் அனைத்தையும், இந்த அரசாங்கம் விலை கொடுத்து வாங்கியிருக்க வேண்டும்; ஆனால், வாங் காமல் இருக்கின்றது.

"இந்நிலையில் தேசமக்கள் தங்களிடமுள்ள தங்கத்தை விலைக்கு மாறக்கூடாது; பாதுகாத்துச் சேமிக்க வேண்டும். நாணயச் செலாவணிக்கு ஆதாரம் தங்கமே. அத்தங்கம் கணக்கின்றி இங் கிருந்து போய்விடுமானால், பின்பு நமது தேசச் செலாவணி நிலையும், பணநிலையும் மிகமிக மோச மாகிவிடும்.

"வேறு வகை இல்லாமலே நம் மக்கள் தங்க ளிடமுள்ள தங்கத்தை விலைக்கு மாறுகின்றார்கள். பின்னளில் தங்கத்தின் விலை குறையும் என்று பலரும் எண்ணியிருக்கின்றனர். இது மிகவும் தப்பான எண்ணம். எனவே, தங்கவிலை குறையும் பொழுது மீண்டும் வாங்கிக்கொள்ளலாம் என்ற நினைப்பும், பகற்கனவாக முடியும். ஆதலினால், சுயநலத்தை மதித்தும், தேசநலத்தைக் கருதியும் மக்கள் தங்களிடமுள்ள தங்கத்தை விற்கவே கூடாது."

இவ்விதம் பண்டிதர் பேசி இன்றோடு இருபது ஆண்டுகள் ஆகின்றன. இன்று சவரன் விலை எழுபது ரூபாய்க்கு மேல் சென்றிருக்கிறது. திருமணக் காலத்தில் தாலி செய்வதற்கான தங்கம் வாங்கவும் பலர் பெரிதும் வருந்துகின்றனர். பின்னால் வரப்போவதை முன்னதாக அறிந்து, பரிவு மிகுந்து, எச்சரிக்கை செய்தார் பண்டித மதன மோகனர்.

உலகெங்கும் பரந்து நின்ற செல்வ நெருக்கடியை அவர் கூர்ந்துணர்ந்து, 'தேசத்தார் அனைவரும் மிகமிகச் சிக்கனமாக வாழவேண்டும்; மிகவும் செட்டாகச் செலவு செய்யவேண்டும் ; இன்றியமையாத பொருளைத் தவிர, வேறு எதனையும் வாங்கவே கூடாது; எளிய வாழ்வே வாழ வேண்டும்; தன்னலத் தியாகம் பூண வேண்டும்,' என்று நமக்கு அறிவு புகட்டினார். அன்று நேர்ந்த செல்வ நெருக்கடியே இன்று தாங்க முடியாத விலை வாசியிலும் வாழ்வில்லாத் திண்டாட்டத்திலும் நம்மை நிறுத்தியுள்ளது.

## 27. மேலும் வாழ

'மானிடருக்கு வயது நூறல்லது இல்லை,' என்பர். ஆயினும், நூறு வயது வாழ்பவர் மிகவும் அருமை. ஐம்பது அல்லது அறுபது வயதுக்குமேல் உயிருடன் இருப்பவர் ஒரு சிலரே. 'இருபதிலே ஏற்றம்; முப்பதிலே முறுக்கு; நாற்பதிலே நழுவல் ; ஐம்பதிலே அசதி ; அறுபதிலே ஆடல் ; எழுபதிலே ஏக்கம்; எண்பதிலே தூக்கம்,' என்னும் ஒரு வசனம் உண்டு.

எழுபது வயது ஆன பின்பு நூற்றிருபது வயது வரை வாழ விரும்புவதாக மகாத்மா காந்தி சொல்லி வந்தார். ஏன்? தேடித்தந்த சுயராஜ்யத்தை நிலைநிறுத்திச் செல்லும் ஆசையே காரணம் என்று அவர் கூறினர். பண்டித மதன மோகன மாளவியாவுக்கு எழுபத்தேழு வயதாகியும், 'சாகப் பொழுதில்லை,' என்று செப்பினர். இதன் காரணம் யாது?

மாளவியாவுக்கு எழுபத்தேழு வயது ஆன பொழுது அவரது பிறந்த தினத்தை நம் தேசத்தார் அனைவரும் கொண்டாடினர்; ஆலயங்களிலே ஆண்டவனுக்கு அபிஷேக ஆராதனை செய்து, நெடுங்காலம் அவர் வாழ வேண்டும் என்று துதித்துத் தொழுதனர். காசிமாநகரிலும் அவ்விதமே மக்கள் அந்நாளை ஒரு திருநாளாகக் கொண்டாடி மகிழ்ந்தார்கள்.

அதற்கு ஆங்குள்ள பெருமக்களும், பிரபுக்களும், பட்டவர்த்தனர்களும் வந்திருந்தார்கள். காசி மகாராஜாவும் கனிவுடன் வந்து, அத்திருநாள் கொண்டாட்டத்தில் கலந்துகொண்டார். வேதம் வல்லார் வேதகீதம் ஓதினர். பெண்மணிகள் பல்லாண்டு கூறினர்கள். மாணவரும் கடவுளைத் தொழுது கைகூப்பினர். மாளவியா நெடுநாள் வாழ வேண்டுமென அங்கே பெருவேள்வி ஒன்றும் நடந்தது.

அப்போது ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக அவர் தேச ஊழியம் செய்து வருவதை மக்கள் பாராட்டி, அவருக்கு வாழ்த்துப்பத்திரம் ஒன்று வாசித்துக் கொடுத்தார்கள். அதற்கு மதன மோகன மாளவியா அளித்த பதிலின் கருத்து இது:

"நமது பாரதபூமியின் நிலையையும், நமது இந்து தருமத்தின் நிலையையும் நோக்க நோக்க, என் நெஞ்சம் கவல்கின்றது! நமது தேசமும் தருமமும் உலகிலே உச்சநிலை அடைதல் வேண்டும். அது குறித்து எல்லாம் வல்ல ஆண்டவனை நான் என் மனமாரத் துதிக்கின்றேன்!

"நமது தேச நாகரிகம் மிகவும் பழமை வாய்ந்தது; மிக்க மேன்மை பொருந்தியது. முன்னம் நம் முன்னோர் உலகத்தார் அனைவருக்கும் அறிவுச் சுடர் கொளுத்தினர். இதுகொண்டு நாம் பெருமை அடையலாம். ஆயினும், அத்தகைய பெருமை இன்று நமக்கு உண்டா? விரைவில் அது கிட்ட வேண்டாவா?

"இந்நிலையில் ஒரு வார்த்தை கூறுவேன்: பிற மதங்களில் நமக்கு வெறுப்பு இல்லை; வெறுப்புக் கொள்ள அவசியமும் இல்லை. நமது இந்து சமயத்தை எல்லாருக்கும் அறிவுறுத்த இந்து சர்வ கலாசாலையைவிடச் சிறந்த ஒன்று உலகெங்கும் இலது. அத்தகைய சர்வகலாசாலைகள் எங்கும் ஏற்படுதல் வேண்டும்.

"காசி இந்து பல்கலைக் கழகம் எழுந்துள்ள பூமியிலே அரிய பெரிய ஆலயம் ஒன்று எழுப்ப ஆசை கொண்டுள்ளேன். அதற்கான ஆயத்தங்களில் இன்னும் நான் முனையவில்லை. அதற்காகப் பெரிதும் வருந்துகின்றேன்! அந்த ஆசை முற்றுப் பெற நீங்கள் அனைவரும் எனக்கு உதவி புரிதல் வேண்டும். இதுவே என் வேண்டுகோள்.

"எனக்கு வயதாகிவிட்டது. தள்ளாத பருவம் என்பர் சிலர். எனக்கோ, சாகப் பொழுதில்லை. என் தலைக்கு மேலே பற்பல வேலைகள் சுமந்

துள்ளன. அவற்றை முடித்து வைத்த பின்பே, நான் கண் மூட வேண்டும். இன்னும் ஒரு பத்து வருஷமேனும் உயிருடன் வாழ விரும்புகின்றேன். அதற்குள் முக்கியமான காரியங்களைச் செய்து முடிக்கச் சிந்தை கொண்டுள்ளேன். கடவுள் அருள் புரிவாராக!"

வயது எண்பது ஆனதும் அவர் காயகற்பச் சிகிச்சை செய்துகொண்டார். அஃது ஓர் உயரிய மருத்துவ முறை. அம்முறையை நன்கு அறிவார் ஒரு சிலரே. அச்சிலரும் இமயமலையில் வாழ்ந்து வருகின்றனர். அன்னாருள் ஒருவர் வந்து மாளவியா வின் மனக்கோளை மதித்து, அக்காயகற்ப முறைப் படி அவருக்கு மருத்துவம் செய்தார்.

இந்த உலக இன்பங்களை எல்லாம் இனிது நுகர, அல்லது பிள்ளை பேரன்மார்களுடன் பிரிய மாக வாழ, அன்றேல் அரும்பதவி பெற்றுக் களிக்க, மேலும் பத்தாண்டு உயிரோடு வாழ அவர் விரும்பவில்லை. பின்பு எதற்காக விரும்பினர்?

'நாம் எடுத்த காரியத்தை இனிது நிறை வேற்ற வேண்டும். நமது தேசத்தின் நிலை ஓங்கி உயர்வதை நோக்க வேண்டும். பழமையான நமது தருமம் தலை சிறந்து நிற்பதைக் காண வேண்டும்,' என்றே அவர் இன்னும் பத்து வருஷம் வாழ விரும்பினர்.

பிறவி கொண்ட பயன் பேருழியம் புரிதலாம்; பாருலகம் பரம சுகம் அடைய வழிகோலுதலுமாம். இப்பயனைக் கண்கூடாகக் காணவே அவர் கருதி நின்றார். அன்பர் பணி புரியவே அவர் அவாக் கொண்டார்; எல்லாரும் இன்புற்றிருக்கவே இச்சை மிகுந்தார். அப்பெரியாரின் பெருமைமே பெருமை!

# 28. பெருங்குணம்

'கடந்த ஞானியரும் கடப்பரோ மக்கள்மேல் காதல்!' என்று ஒரு புலவர் பாடியுள்ளார். தம் மக்கள்மீது பண்டித மாளவியாவுக்கு மிகுந்த பாசம் உண்டு. ஆனாலும், தேச சேவையில் அப் பாசம் குறுக்கிட்டதே இல்லை. அவருக்குப் பதினாறு வயதுள்ள புதல்வி ஒருத்தி இருந்தாள். காசநோய் அம்மங்கையை மிகவும் வாட்டியது. மணி மந்திர ஔஷதங்களெல்லாம் பயன்படவில்லை. முடிவிலே அவள் மாண்டு போயினாள், விதி வலியால்.

பண்டிதர் உடனே கண்ணீர் விட்டுக் கதறினார். அது சமயம் அவர் அன்பர், ஈசுவர சரணர் என்பவர், துக்கம் விசாரிக்க வந்தார். அவரும் வாய் விட்டு அழுதார். அப்போது பண்டிதர் யாது சொன்னார்? "என் ஒரு மகளுக்காக நான் புலம்பினேன். நீங்களும் துடிக்கிறீர்கள்! நல்லது! நமது பூமியிலே ஆயிரக்கணக்கான மாதர் மணிகள் ஆண்டுதோறும் இத்தீய நோய்க்கு ஆளாகி மடிகின்றார்களே! அவர்களுக்கெல்லாம் நல்லுணவேனும் உண்டா? ஓரளவு மருத்துவத்துக்குத் தான் வகை உள்ளதா? அவர்கள் தாய்தந்தையர் இரத்தக் கண்ணீர் வடிப்பரல்லரோ? அவர்களுக்கு நாம் என்ன வகை செய்துள்ளோம்? தேசமெங்கும் மருத்துவச் சாலைகள் அமைக்க வேண்டும். காசநோய்க்கு ஏற்ற வாசவிடுதிகள் ஏற்படுத்தல் வேண்டும். நாம் ஒன்றும் செய்யவில்லையே!" என்று கூறினார்.

அம்மகள் மரித்த மறு நாள், காசி இந்து பல்கலைக் கழகத்தில் பெருங்கூட்டமொன்று நடக்க இருந்தது. அதற்கு மாளவியா கட்டாயம் போய்த்

தீரவேண்டும். சிறிதும் தயங்காமல், அவர் மறு நாள் அதிகாலையிலேயே காசிக்குப் பயணம் ஆனர். பல்கலைக் கழகத்தின் ஆசிரியரும் மாணவரும் அம் மரணச் செய்தி கேட்டுப் பண்டிதரின் மனப் பான்மையை உணர்ந்து, அதிசயம் அடைந்தனர்.

அலகபாது நகரிலே பண்டிதருக்கு இரண்டு வீடுகள் உண்டு: ஒன்று நகரின் நடுவிலும், மற்றொன்று ஆங்கிலேயர் வசிக்கும் இடத்திலும் இருந்தன. நகரிலே பிளேகு நோய் கண்டதும், எல்லாரும் தம் வீடுகளைக் காலி செய்து வேற்றிடம் போய் விட்டனர். நகரின் நடுவே இருந்த வீட்டிலிருந்து ஒரு கடிதம் எடுத்து வர நம் பண்டிதர் சென்ருர்.

நகரிலே காக்கை குருவியும் இல்லை. ஒரு வீட்டிலே ஏழைக் கிழவியொருத்தி தனிமையில் இருப்பதை அவர் அறிந்தார். அவளோ, எளிய குலத்தாள்; ஈன நிலையில் உள்ளவள். அவளைக் கண்டதும் அவர், "பாட்டி, நீ தனியே இருப்பது ஏன்? என்னுடன் வா. நல்ல இடத்துக்கு அழைத்துச் செல்வேன்," என்று கசிந்து கூறினர்.

அதற்குக் கிழவி, "பெரியவரே, பண்டிதரே, உம்மைக் கண்டதும் உவகை கொண்டேன்! நான் தனியே இருந்தால் என்ன? உங்கள் சொல்லமுதம் பருகினேன்! ஆறுதலும் அடைந்தேன்! உங்கள் சொல்லே எனக்குத் துணையாகும்; தனிமையில் இருக்கும் தவிப்பையும் போக்கும். நான் கிழவி தானே! வீட்டுக்குக் காவலாக என்னை வைத்துப் போயினர். வந்தனம்! போய் வாருங்கள்!" என்று கூறினள்.

பண்டிதரின் வீட்டில் ஒருநாள் விருந்தொன்று நடந்தது. அவர்தம் செல்வத் தோழர் ஈசுவர

சரணரை அவர் விருந்துக்கு அழைத்தார். அவ்வாறே சரணரும் விருந்துக்கு வந்தார். வந்ததும், 'உங்கள் குமாஸ்தா ஏன் வரவில்லை?' என்றார் பண்டிதர். 'நீங்கள் அவரை அழைக்கவில்லையே!' என்று அத்தோழர் விடை அளித்தார்.

மறதியினால் குமாஸ்தாவை மாளவியா அழைக்கவில்லை. உடனே அந்த அன்பரிடம் அவர் மன்னிப்பு வேண்டினார்; பின்பு வெளியே ஒரு வாகனத்தில் விரைந்து சென்றார்; சிறிது நேரமானதும் குமாஸ்தாவை அழைத்துக்கொண்டு திரும்பி வந்தார். இதற்குள், 'பண்டிதரைக் காணவில்லையே!' என்று எல்லா விருந்தினரும் கவன்றனர்; பின்பு உற்றது முற்றும் அறிந்து உவகை பூத்தனர்.

பிரயாகை நகரிலே ஒரு பாடசாலையின் பரிசளிப்பு விழா நடந்தது. அதற்கு மதனமோகனர் போயிருந்தார். பரிசளிப்பிற்குத் தலைமை வகித்தவர் ஓர் ஆங்கில நீதிபதி. அத்தலைவருடன் அவர் மகளும் வந்திருந்தாள். விழா முடிந்தது. பண்டிதர், ஈசுவர சரணரை நோக்கி, "அன்பரே, நீர் இன்று அதிசயம் ஏதேனும் கண்டதுண்டோ?" என்று கேட்டார்.

ஈசுவர சரணர், "நேசரே, கண்டேன். அதைக் குறித்தே சிந்திக்கின்றேன்," என்று கூறினார்.

உடனே மாளவியா, "அன்பரே, நீதிபதியின் மகளுக்கு வயது பதினேழு இருக்கும். எந்த விதமான நோயும் நொடியும் இல்லை. மிகவும் அழகாகத் தோன்றுகின்றாள். நம் தேசப் பெண்களும் இவ்வளவு அழகாக, ஆரோக்கியமாக, இருக்க வேண்டாவா? அந்நன்னாள் எந்நாள்? அது குறித்து என்ன செய்கின்றோம் நாம்?" என்று மனங் கரைந்து மொழிந்தார்.

பண்டித மாளவியாவின் மாளிகைக்கு யாவரும் இரவு பகல் எண்ணுமல் வந்து தம் குறைகளை உரைத்துக்கொள்ளலாம். ஒரு சமயம் அவர் நோய் மிகுதியினுல் படுத்த படுக்கையாய்க் கிடந்தார். 'யாரும் வந்து பண்டிதருடன் பேசக்கூடாது,' என்பது வைத்தியரின் எச்சரிக்கை. அப்படியிருந்தும், பலர் வந்து பண்டிதரைப் பார்த்துத் தமது குறையைக் கூறிக்கொள்வர்.

வந்து பார்த்து முறையிட்டுக்கொள்வோரின் தொகை பெருத்துவிட்டது. அதனுல், பண்டிதரின் வாதை பெருகியது. அவர் புதல்வர் ஒருவர், "இனி ஒருவரையும் உள்ளே வரவிடேன்," என்று படபடத்தார். அதனை அறிந்த பண்டிதர், "பதருதே!" என்று அமைதியுடன் உரைத்தார். அவர் குமாரர் அது கேட்டும் அமைதி அடையவில்லை.

உடனே பண்டிதர் தம் புதல்வரை அருகே அழைத்து, "அப்பா, நான் உயிரோடு இருக்கும் வரையில் இந்த வீட்டிலே எனக்கு ஆதிக்கம் அளிப்பாயாக. இங்கு வந்து முறையிடும் மக்களுட்பலர் ஏழைகள். தங்குதடையின்றி அவர்கள் வருதல் வேண்டும். அவர்கள் குறைகளைக் கேட்டதும், 'விரைவில் நான் குணமடைந்து அவர்களுக்கு ஆறுதலளிக்க முயல வேண்டும்,' என்று ஆண்டவனை வேண்டிக்கொள்வேன். இதனைவிட அரிய ஊழியம் ஒன்று உண்டோ?" என்று நயம்பட நவின்ருர்.

ஒரு நாள் அன்பர் சிலர் விசுவ வித்தியாலயத்தைப் பார்க்க வந்தனர். ஒவ்வோர் இடமாக மதன மோகன மாளவியா அவர்களுக்குக் காட்டிவந்தார். அவர்களுள் ஒருவர் அங்கிருந்த மின்சார விளக்குத்

தூண்களை நோக்கி, 'இவை ஒத்த அளவினவாய் இல்லையே!' என்றார்; 'இரஸிகன் கண்டால், அவன் மனம் கூசுமே!' என்றும் சொன்னார்.

பண்டிதர் அது கேட்டதும் புன்னகை பூத்து, "ஐயா, அத்தூண்கள் ஏற்றத் தாழ்வாகவே இருக்கின்றன. அடியேன் என்ன பதில் சொல்வேன்! அவை நம் பாரதமாதாவின் வறுமையை எடுத்துக் காட்டுகின்றன," என்று கூறினார்.

## 29. முடிவுரை

உலகப் பெரியார் பலரும் ஒவ்வொரு துறையிலேதான் உன்னதம் எய்தியிருப்பர். பண்டித மாளவியாவோ, பற்பல துறைகளிலும் பெருமை நாட்டிய பெருமான். இந்தியாவின் சுதந்தர சரிதத்திலே அவரது பெயரைப் பொன் எழுத்துக்களால் பொறிக்க வேண்டும்.

ஏனென்றால், பிறந்த நாள் தொடங்கி ஈசன் பாதம் சேரும் வரையில் அவர் காங்கிரஸ் ஊழியம் புரிந்துவந்தார். அம்மகாசபை நடைமுறை குறித்து ஒவ்வொரு சமயம் அவர் மாறுபட்டது உண்டு. ஆனாலும், அம்மகா சபைக்கு எதிராக அவர் நடந்ததில்லை. மாறுபட்டு நின்ற காலத்திலும் அதற்கு ஊன்றுகோல் போலவே அவர் விளங்கி வந்தார். இஃது அவரது குணநலம்.

அவர் எள்ளளவும் சுயநலம் என்பதில்லாமல் பரநலமே கருதித் தியாக வடிவமாய் இருந்ததனால், காசி இந்து சர்வ கலாசாலை தோன்றியது. அஃது அவர் நாட்டிய புகழ்க்கம்பம் என்னலாம்.

இந்து சமூகம் அவரை ஒருநாளும் மறக்கமுடியாது. இந்துக்களின் நல உரிமைகள் தீங்கடையும் என்று தோன்றியதும், இந்து மகாசபையை அவர் தோற்றுவித்தார். அதனை நிலைநாட்டும் வரையில் அதனிடம் அவர் அக்கறை கொண்டிருந்தார். அவரைப் போலச் சமூக உயர்வினுக்கு உழைத்தவர் மிகச் சிலரேயாவர்.

அவரைக் குறுகிய நோக்கமுடைய சமூக வாதி என்று கூற முடியாது. ஏனைய சமூகங்களுக்கு உரிய உரிமை தர அவர் ஒப்பியவர். ஆயினும், வரம்பு மீறியோ, இந்து சமூகத்தினுக்கு இடையூருகவோ, ஒரு சமூகம் உரிமை பெற விரும்பினல், அவர் சிறிதும் இசையாதவர்.

முகம்மதியருக்குப் போட்டியாக அவர் இந்து மகாசபை காணவில்லை. முகம்மதியரையும் சோதரர் போலவே நினைக்கும் பெருந்தன்மை உடையவர் அவர். இந்துக்களின் தலைவரான பண்டிதரும் முகம்மதியரின் தலைவரான மௌலாஞ முகம்மது அலியும், 1927-ஆம் ஆண்டு சென்னைமா நகரில் நடந்த காங்கிரஸ் மகாசபையின் மேடைமீது ஒருவரையொருவர் கட்டித் தழுவிக்கொண்ட காட்சியை இங்கே குறிப்பிடல் வேண்டும். அவரது நோக்கிலே ஒரு குறையும் காண முடியாது.

பண்டித மாளவியா பணத்தைக்குவிக்க ஆவல் கொண்டிருந்தால், திரண்ட செல்வம் சேர்த்திருக்கலாம். தேச நலத்தை மதித்து அறுபது நாழிகையும் ஊழியம் புரிய எண்ணி அவர் வறுமை விரதமே பூண்டார். மூத்த மைந்தர் வக்கீலானதும் குடும்ப பாரத்தை அவரிடம் பண்டிதர் ஒப்படைத்துவிட்டார்; தாம் வருவாய் தேடுவதையும் மறந்துவிட்டார்.

வேத நெறிக்கிணங்க நடப்பவரையே வைதிகர் என்பர். நம் பண்டிதர் பரம வைதிகராயினும், யாவரையும் நேசிப்பார்; எல்லாருடனும் சோதர ரைப்போலக் கூடிக்குலாவுவார்; அனைவரிடமும் அன்பே காட்டுவார். இசையின்பம் துய்ப்பதில் அவருக்கு ஆசை உண்டு. அதன் பலனையும் அவர் நன்கு அறிவார்; ஆனாலும், அந்த இன்பம் துய்க்க அவருக்கு அவகாசம் கிடைக்கவில்லை. நாள் தோறும் இரவிலே நெடுநேரம் விழித்திருந்து வேலை செய்யக் கூடியவருக்கு இசை கேட்க ஓய்வு ஏது!

பண்டித மாளவியா, பார்வைக்கு வெகு அழ காய் இருப்பார். அவர் முகவிலாசம் அனைவர் மனத்தையும் கவரும்; சொல்லழகும் இனிய குரலும் எல்லாரையும் பரவசப்படுத்தும். கடைநாள் வரையில் அவர் இனிது வாழ்ந்து வந்தார். இதற்கு மூலகாரணம் அவரது மாசற்ற நெஞ்சமும், எளிய இனிய வாழ்க்கையுமாம்.

'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்?' என்று தமிழ்மறை மொழியும். பண்டிதர் அன்பின் வடிவினர். பிறரது துயரம் காணின், அவர் கண் களில் நீர் ததும்பும். பொது வாழ்விலும் தனி வாழ்விலும் அவருக்குப் பகைவர் என்பவர் இல்லை. அவரிடம் மாறுபாடு கொள்பவரும் அவரிடம் மதிப் புக் காட்டியே நடப்பது வழக்கம்.

மகாத்துமா காந்தி வரைந்திருக்கும் வண்ணம் பண்டித மதன மோகன மாளவியா, இந்துக்களின் திலகம்; தேசபத்தரின் சூடாமணி; தருமசிந்தை யின் சிகரம்; தீமை புரிவாரையும் நேசிக்கும் இனிய புருஷர்.



வாழ்க மாளவியாவின் வான்புகழ்!